REG. No. M. 3886 20 பக்கங்கள்



# ஜனசக்தி

சோஷியலிஸ்ட் வாரப்பத்திரிகை

ஆசிரியர்
ப. ஜீவானந்தன்



| மாலை 1 | சென்னை, சனிக்கிழமை, 25—2—'39 | மலர் 46 |
|---|---|---|



சீனவில் ஜப்பானியர் கைப்பற்றிய பிரதேசத்திலிருந்து அலங்கோலமாக தன் குழந்தை, மூட்டை முடிச்சுகளுடன் ஓர் சீனப் பெண்மணி வெளியேறும் காட்சி!

## பொருளடக்கம்



ச் சந்தா ரூ. 3. தனிப்பிரதி அணா 1.

# பாரி அண்டு கம்பெனி ஆலைத் தொழிலாளர் சங்க கூட்டுறவு கமிட்டி

★

### கூட்டுறவு கமிட்டி தோன்றியதின் காரணம்

சென்ற 25-12-38-ந் தேதி நெல்லிக்குப்பத்தில் பாரி அண்டு கம்பெனி ஆலைச் சங்கங்களாகிய சாமல்கோட்டை, ராணிப்பேட்டை, தக்கலை, நெல்லிக்குப்பம் இவைகளின் பிரதிநிதிகள் ஒன்றுகூடி, N. R. S. T. Workers' Federal Committee-யை ஏற்படுத்தினார்கள். இந்த ஐக்கிய சங்கத்தின் பொது நோக்கம் என்னவெனில், தென்கோடியில் இருக்கிற தக்கலைத் தொழிலாளர்களும், கோதாவரி ஜில்லாவில் இருக்கிற சாமல்கோட்டைத் தொழிலாளர்களும், நெல்லிக்குப்பம், ராணிப்பேட்டைத் தொழிலாளர்களும் ஒரே மானேஜ்மெண்டாரிடம் வேலை செய்தும்கூட, ஒவ்வொரு இடத்திலும் வெவ்வேறு விதமான சலுகைகளும் சட்டங்களும் இருப்பதினால், அனைவரும் ஒன்றுகூடி ஓர் ஐக்கிய முன்னணியோடு போரிடலாமென்ற உத்தேசம் கொண்டுதான், இக்கூட்டுறவு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

### கமிட்டியின் நடவடிக்கை

அதே கமிட்டி மறுபடியும் 20-2-39-ந்தேதி ராணிப்பேட்டையில் கூடிற்று. சாமல்கோட்டையிலிருந்தும், நெல்லிக்குப்பத்திலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். தக்கலையில் நெருக்கடி ஏதோ ஏற்பட்டுவிட்டதால், அவர்கள் வர முடியாமற் போயிற்று.

கமிட்டிக்கு தோழர்கள் ஜி. வெங்கட்ராயுடு, B. A. B (Com), பி. என். பரமேஸ்வரம் பிள்ளை, பி. புருஷோத்தமன், டி. எம். சீனிவாசன் இவர்கள் முறையே தலைவர், உபதலைவர், காரியதரிசி, உபகாரியதரிசியாக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். கமிட்டியின் சட்டங்கள் பரிசீலனை செய்யப்பட்டு ஏகமனதாக ஒப்புக் கொள்ளப்பட்டது.

25-12-'38ம் தேதி கூடிய கமிட்டியில் நிறைவேற்றிய தீர்மானங்கள், மானேஜிங் ஏஜன்ட்ஸ் அவர்களுக்கு அப்போதே தெரிவித்திருந்தும், இது வரையில் அவர்கள் ஒருவித ஏற்பாடும் செய்யாததைப்பற்றி விவாதித்து மறுபடியும் 21-2-39ம் தேதி மானேஜ்மெண்டாரை மதராஸில் காண வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது.

### மானேஜ்மெண்டாருக்கு நோட்டீஸ்

25-12-'38ம் தேதி பெடரல் கமிட்டி போட்ட தீர்மானங்களை இன்றுவரை மானேஜ்மெண்டார் காரியாம்சையில் கொண்டு வாராததினால், இம்மாதம் முடிவிற்குள்ளாவது அத்தீர்மானங்களை நிறைவேற்றுவார்கள் என்று கமிட்டி நம்புவதாகவும், அப்படி இம்மாதம் முடிவிற்குள் அவர்கள் அந்த தீர்மானங்களை அமுலுக்குக் கொண்டுவரா விட்டால், நான்கு யூனியன்களும் சேர்ந்து ஒரு பொது வேலை நிறுத்தம் செய்ய வேண்டிவரும்—அந்தப் பொது வேலை நிறுத்தத்திற்கு இதுவே நோட்டீஸ் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

### பொதுக்கூட்டம்

பிறகு மாலை 5 மணிக்கு ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு தோழர் ஜி. வெங்கட்ராயுடு தலைமை வகித்தார்.

தோழர்கள் லக்ஷ்மணசாமி, சிவஞானம், புருஷோத்தமன் முதலியோர் தொழிலாளர் வர்க்க முன்னேற்றம் என்பதைக் குறித்துப் பேசினார்கள்.

---

## இறப்பும் பிறப்பும்!

1939-ம் ஆண்டு ஜனவரி 14-ந் தேதியிலிருந்து 21-ந்தேதி முடிய ஒரு வாரத்தில், 13,886,995 ஜனத்தொகை கொண்ட இந்தியாவின் 152 பட்டணங்களில் இறந்தோர் தொகை 8,113. அதாவது ஒரு வருடத்தில், இந்தியாவில் ஆயிரம் பேருக்கு சராசரி 30·6 பேர் மடிகிறார்கள். இதே நகரங்களில் பிறப்பவர் தொகை 10,289—அதாவது வருடத்திற்கு ஆயிரத்தில் 38.8 பேர். சென்னையில் இறப்பவர் வருடத்தில் ஆயிரத்திற்கு 50 பேர்கள்!

# பசுமலை பஞ்சாலைத் தொழிலாளர் சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டம்

★

சங்க உபதலைவர் தோழர் ப ஜீவானந்தம் அக்கிராசனத்தின் கீழ், 21-2-39ல் நடைபெற்ற பொழுது, அடியிற்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கின்றனர்.

(1) 8-1-39ந் தேதி பாக்டரி இன்ஸ்பெக்டர் வந்து விசாரித்துச் சென்று ஒரு மாதத்திற்கு மேலாகியும், சமரச ஒப்பந்தப்படி முக்கியஸ்தர்களான ரீலிங் மேஸ்திரி வெள்ளைச்சாமி மணியம், ஆயிலர் வேலு சேருவை, குமஸ்தா பாண்டியம் பிள்ளை இன்னும் சில தொழிலாளர்களுக்கும் வேலை கொடுக்காமல் காலங்கடத்தி வரும் பசுமலை மகா லட்சுமி மில் மானேஜ்மெண்டாரின் எதேச்சாதிகாரத்தைக் கண்டித்தும் (2) மேற்படி மூவர்களுக்கும் வேண்டுமென்றே, அனாவசியமாக முதலாளிகள் வேலை கொடுக்க மறுப்பதால், சமரஸ ஒப்பந்தப்படி 7-11-38 முதல் இம்மூவர்களுக்கும் சம்பளம் கொடுக்க வேண்டுமென்றும் (3) மேற்படியார்களுக்கு சீக்கிரத்தில் வேலை கொடுத்து அமைதியை நிலைநாட்ட வேண்டுமென்றும், பழிவாங்கும் தன்மையில் இன்னும் எதேச்சாதிகார ஆட்சி நடத்தி, தொழிலாளர்களை கஷ்டப்படுத்துவதை நிறுத்த வேண்டுமென்று மானேஜ்மெண்டாரைக் கேட்டுக்கொள்ளுவதாகவும் (4) இன்னும் இவ்வித நிலைமையையே மானேஜ் மெண்டார் அனுஷ்டித்து வந்தால், அதனாலேற்படும் அசம்பாவிதங்களுக்கு மில் முதலாளிகளே ஜவாப்தாரியாக வேண்டுமென்று எச்சரித்தும் (5) தொழிலாளர்களுக்கு கொடுக்கப்பட வேண்டிய சம்பள பாக்கி ஜாப்தாவை இன்னும் நோட்டீஸ் போர்டில் தொங்கவிடாமலிருப்பதையும், சில முக்கிய தொழிலாளர்களை, சங்கத்தில் சேர்ந்து உழைத்து வருகின்ற காரணத்திற்காக, கஷ்டமான வேலைக்கு மாற்றி தொந்தரவு செய்வதையும், யாதொரு குற்றமும் செய்யாத தோட்டக்காரன் சங்கிலியை டிஸ்மிஸ் செய்திருப்பதையும், வேண்டுமென்றே குற்றம் சுமத்தி நீண்ட நாள் சஸ்பெண்டு செய்வதையும், தொழில் சட்டங்களுக்கு விரோதமாக, தொழிலாளிகளுக்கு அதிகமாக அபராதம் போடுவதையும், அதற்கு ரசீதுகள் கொடுக்காமலிருப்பதையும், பிரசவ சகாயத் தொகை கொடுக்கும் விஷயமாக மானேஜ்மெண்டார் கையாளும் முறை சரிவர இல்லாதிருப்பதை சமரச ஒப்பந்தப்படி இன்னும் . தொழிலாளர்களுக்கு, சர்வீசுக்குத் தகுந்தபடி சிக் லீவ், காஷியல் லீவ் கொடுக்க மறுப்பதையும், உடம்பு சௌகர்யமில்லை யென லீவ் லெட்டர் அனுப்பினால், அந்த நோயாளி நேரில் வந்தால்தான் லீவ் கொடுக்க முடியுமென்று சொல்லி மறுப்பதையும், சஸ்பெண்டு செய்யப்பட்ட தொழிலாளர்கள் திரும்ப வேலை கேட்கும்பொழுது, அந்த டயப்படி வேலை கொடுக்க காலதாமதப்படுத்துவதையும் கவனித்து, தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமாய், கனம் முதன் மந்திரி, தொழில் மந்திரி, லேபர் கமிஷனர், ஜில்லா கலெக்டர் முதலிய அதிகாரிகளைக் கேட்டுக்கொண்டும் (6) மில் முதலாளியின் கையாளான அட்டெண்டர், தொழிலாளர்களைப் பயமுறுத்தி வருவதை அதிகாரிகளுக்குப் பல தடவைகளில் எழுதியும் கவனிக்காமலிருப்பது சம்பந்தமாக ஓர் தீர்மானமும் (7) வைசூரியால் வாடும் தொழிலாளர்களுக்கு சட்டப்படி சம்பளத்துடன் லீவ் கொடுக்கக் கோறியும் (8) ரோலிங் டிபார்ட்மெண்டு பீர்கான் சாகிப், சங்கத்தில் சேர்ந்து தீவிரமாக உழைப்பதற்காக மில் காம்பவுண்டுக்குள் வழக்கம்போல் வைத்துப்போன சைக்கிளை திரும்ப வேலைவிட்டு வந்து பார்க்கும்பொழுது காணாமற் போயிருப்பதை மில் முதலாளிகளிடம் தெரிவித்தும் கவனியாமலிருப்பதற்கு வருந்தியும், அதற்குண்டான கிரயத்தை சம்மந்தப்பட்டவர்களிடம் வாங்கிக் கொடுக்கக் கோறியும் (9) வேலை நிறுத்தத்தின்பொழுது தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி, கமிட்டி ஆக்ஞைப்படி சமரஸம் செய்து ஒப்பந்தம் முடித்து சென்ற பிரகாரம், மில் முதலாளிகள் நடக்காமல் தொழிலாளர்களை பழி வாங்கும் தன்மையுடன் கஷ்டப்படுத்தி வருவதை கவனிக்க வேணுமாய் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவரைக் கேட்டுக் கொள்வதாகவும் தீர்மானங்கள் நிறைவேறின.

---

## அறிக்கை

—:o:—

**'ஜன சக்தி'க்கு பணம் பாக்கி வைத்திருக்கும் தோழர்கள், 28-2-39க்குள் பணத்தை அனுப்பி வைக்கவும். தவறினால், பாக்கிதாரர்களின் பெயர் விலாசம் முதலியவைகள் அடுத்தவாரம் 'ஜன சக்தி'யில் பிரசுரிக்கப்படுவதுடன், பணம் வசூலிக்கவும் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.**

மானேஜர்
"ஜன சக்தி"

# ஓடுகிற ஓட்டத்தில்

—[நாடோடி]—

திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரையைவிட, சங்க நூற்களுக்கு நக்கீரர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் உரைகளைவிட, பகவத் கீதைக்கு காந்திஜியின் அனு சக்தியோகத்தைவிட, காந்தீயத்திற்கு 'தினமணி'க் கும்பல் செய்யும் வியாக்யானம் ரொம்பத் துள்ளியம், வெகுதெளிவு, முதல்தரமென்று தமிழ்நாட்டுக் காந்தீயர்கள் பலத்த பிரசாரம் செய்வதாக ஓர் பெருத்த வதந்தி மதுரைப் பக்கத்தில் உலாவுகிறது.

* * *

“பலாத்கார இயக்கம் வெற்றி பெற்றே தீரும். ஆனால் உயிர்ச் சேதமும் பொருட் சேதமும் அதிகமாய் ஏற்படும். அஹிம்சை இயக்கத்தில் இந்தியர்தான் கஷ்டப்படுவார்கள்; உயிர் துறப்பார்கள்; பிரிட்டீஷாரின் உயிருக்கோ உடலுக்கோ இம்மிகூட சேதம் வராது. எனவே, பலாத்கார இயக்கத்தைவிட அஹிம்சை இயக்கம் பிரிட்டீஷாருக்கு மிகுந்த பாதுகாப்பைக் கோடுக்கிறது. பலாத்கார இயக்கத்தால் சுயராஜ்யம் பெற முடிந்தாலும், அஹிம்சை இயக்கம் மூலம் பெறுவதற்கு காங்கிரஸ் தீர்மானித்ததற்காக பிரிட்டீஷார் நன்றி பாராட்ட வேண்டும்” என்ற பகுதியை 16-2-39-ல் வெளிவந்த 'தினமணி'யின் தலையங்கத்தில் ஒருவர் படித்தார்.

“அஹிம்சா பரமோதர்ம:” என்று முழங்கினார், ஒரு சாஸ்திரியார் பிள்ளையாண்டான்.

“தினமணிக் கோஷ்டியின் காந்தீய ஞானமே ஞானம்” என்றார் ஒரு ராஜாஜி பக்தர்.

“அஹிம்சா தர்மத்தின் பெருமைக்கு அருமையான எடுத்துக்காட்டு” என்றார் ஒரு காந்திக் குல்லாய்.

“அஹிம்சையைக் கேலி செய்யும் அவசர வாதிகளுக்கு நல்ல சூடு” என்று உறுமிற்று ஒரு சட்டசபைப் புலி.

* * *

தினமணி ஆபீஸ் திமிலோகப்படுகிற தென்றும் வல்லபாச்சாரிகளின் (வல்லபாய் X ஆச்சாரியார்) அடியார் கூட்டங்களாகிய தினமணிக் கும்பல் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டு தயாராகிறார்களென்றும், ஒருவர் ஓடோடியும் வந்து சொன்னார். எனக்கு ஒன்றும் புரியாமையால், இந்தி எதிர்ப்புக் கல்லடிச் சாமிகளின் பிரளய காலத் திருவிளையாடல்கள்தான் இந்த அல்லோல கல்லோலத்திற்குக் காரணமோ என்று சந்தேகப்பட்டேன். ஆனால் உள்ளளவு தெரிந்த ஒருவர் “சமஸ்தானப் போராட்டத்தை காந்திஜியே நடத்துவார் என்றும், சர்தார் வல்லபாய் படேல் தளகர்த்தரா யிருப்பாரென்றும், பம்பாயிலிருந்து தினமணி விசேஷ நிருபர் மூலம் கிடைத்த செய்தியே மேற்படி சம்பவதற்குக் காரணம்” என்று எடுத்துக் கூறியதும் எனது சந்தேகம் சூரியன் முன் பனி ஆயிற்று.

* * *

காங்கிரஸ்காரர்களின் “தோழர்களும்” ராஜாஜியின் “ஆணைக்குட்பட்டவர்களும்” ஆகிய போலீஸார், பசுமலை வேலைநிறுத்தத்தில், நிரபராதிகளான “குடுகுடு” கிழவிகளின் மண்டையைப் பிளந்த காட்டுமிராண்டித் தனத்தைத் தெரிந்திருந்தும், மந்திரி சபைக்குச் சிங்கியடிக்கும் பத்திரிகையாகிய தினமணி 'சத்தியத்தை' ரட்சிக்கவும், 'அஹிம்சை'யை நிர்த்தாரணம் செய்யவும் வேண்டி, “வேலை நிறுத்தம் பலாத்காரமான” தென்று ஒரு தலையங்கம் எழுதி, காந்தீயத்தில் தனக்கேற்பட்டிருக்கிற அபார ஞான விலாசத்தை உலகறியச் செய்ததல்லவா? அதுபோல், சிட்டி வாலஸாவில் நடந்த உள்ளிருப்ப வேலை நிறுத்தத்தில் (Stay-in-Strike) போலீஸார் நடத்திய துப்பாக்கிப் பிரயோகம் சம்பூர்ண அஹிம்சையென்றும், தொழிலாளர்கள் அமைதியாக நடத்திய உள்ளிருப்பு வேலை நிறுத்தம் கொடிய பலாத்காரமென்றும், 'தினமணி' தொடர்ச்சியாக மூன்று தலையங்கங்களின் மூலம் பளிங்குபோல் விளங்க வைக்கப் போவதாகவும் “வர்க்கப் போராட்டம்” என்று 'அவசர வாதிகள்' அடிக்கடி சொல்லும் கொள்கையை, சென்னைப் பிரதம மந்திரியாரின் உபதேசங்களையும் 'ஹரிஜன்' பத்திரிகையின் கட்டுரைகளையும் மேற் கோள் ஆயுதங்களாகக்கொண்டு, சக்கையாகப் பிளந்தெறியப் போவதாகவும் ஓர் பிரபல அரசியல் ஜோதிடர் கூறுகிறார். ஆனால் “சோதிடம் தனை இகழ்” என்ற பாரதியார் கொள்கைதான் எனக்கும்.

* * *

“குற்றங்குறை சொல்லுவதைப்போல சுலபமான வேலை சோம்பேறித்தனத்தில் கூட கிடையாது. அந்த அபூர்வமான வேலையை விட்டு, பொறுப்பை ஏற்றுக்கொள்வதென்றால் யாருக்குத்தான் சம்மதம் இருக்கும்” என்று சட்டசபை வாதமும் சமஷ்டி வாதமும் கலந்து எருமைமாட்டு வாதத்திற்கு வந்துவிட்ட தினமணி யதார்த்தவாதிகளை 'அவசரவாதி'களாக்கி மேற்கூறியவாறு எழுதி யிருக்கிறதென்றார் ஓர் தீவிரவாதி.

“காமாலைக்காரனுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள்” என்றார் பக்கத்திலிருந்த அகராதி.

“ஜன்னிப்பித்தம் கொண்டவனுக்கு சர்க்கரையும் கசப்பாய்தானிருக்கும்” என்றார் அனுபவஸ்தர் ஒருவர்.

“தேவரே போல்வர் கயவர் அவருந்தான் மேவன செய்தொழுகலான்” என்ற குறளடிகள், தினமணியின் யோக்யதையைக் கேட்டதும் எனது ஞாபகத்திற்கு வருகிறதென்றார் ஒரு திருக்குறள் பாராயணி.

* * *

ஸ்ரீ குமாரசாமி ராஜா தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் உபதலைவர்; இராமநாதபுரம் ஜில்லா போர்டின், காங்கிரஸ் கமிட்டியால் நியமிக்கப் பட்ட, தலைவர். அவர், செனெட் அங்கத்தினர் தேர்தல் விஷயமாக, காங்கிரஸ் கமிட்டியின் நியமனத்திற்கு விரோதமாக ஸ்ரீஜெயராம ரெட்டியாருக்கு ஓட்டுச் சேகரித்து, காங்கிரஸ் அபேட்சகரான ஸ்ரீ கரு. முத்து-சிவலிங்கத்தைத் தோற்கடித்து விட்டார். இதைக் கண்டித்தும், ராஜாவின் மேல் ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டியும், இராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியும், இராமநாதபுரம் ஜில்லா போர்டு காங்கிரஸ் கட்சியும் தீர்மானங்கள் நிறைவேற்றி யிருக்கின்றன. இவ்வளவு விஷயங்கள் தெரிந்த பின்னும், ஸ்ரீராஜா செய்த குற்றத்திற்கு அவர் வருத்தம் தெரிவித்துக் கொள்ள வேண்டு மென்று சமீபத்தில் நடந்த த. நா. கா. காரியக் கமிட்டித் தீர்மானித்திருப்பதைபபற்றி தங்கள் அபிப்பிராய மென்ன? என்று மதுரை ஜில்லா போர்டு மெம்பர் ஒருவர் கேட்டார். அவருடைய சகோதர அங்கத்தினர் ஒருவர், உடனேயே, “மருமகள் உடைத்தால் பொன் சட்டி மாமியார் உடைத்தால் மண் சட்டி” தானே? என்று பதில் சொன்னார்.

* * *

கேள்வி:—ஒரு ஸ்தாபனம் பெரிதா, தனி மனிதன் பெரியவனா?

பதில்:—ஒரு ஸ்தாபனம்தான் பெரிது.

கே:—காங்கிரஸைவிட காந்திஜி பெரியவரா அல்லது காந்திஜியைவிட காங்கிரஸ் பெரிதா?

ப:—காந்திஜிதான் பெரியவர்.

கே:—யார் காங்கிரஸ்காரன்?

ப:—நான்கணா கொடுத்து அங்கத்தினராய்ச் சேர்ந்து, காங்கிரஸின் சட்ட திட்டங்களுக்கு விரோதமின்றி நடக்கிறவன் காங்கிரஸ்காரன்.

கே:—காந்திஜி சட்டப்படி காங்கிரஸ் அங்கத்தினரா?

ப:—இல்லை.

கே:—காங்கிரஸில் இருப்பவாகளில் எல்லோருக்கும் மேற்பட்ட அதிகார முடையவர் யார்?

ப:—ராஷ்டிரபதி அதாவது அகில இந்தியக் காங்கிரஸின் தலைவர்.

கே:—இப்போது ராஷ்டிரபதி யார்?

ப:—சுபாஷ் பாபு.

கே:-ராஷ்டிரபதியான சுபாஷ் பாபுவின் உத்தரவுகளுக்கா அல்லது காந்திஜியின் ஆணைகளுக்கா, எதற்கு ஒவ்வொரு காங்கிரஸ்காரனும் கட்டுப்பட்டு நடக்கக் கடமைப்பட்டிருக்கிறான்?

ப.—காந்திஜியின் கட்டளைக்குத்தான் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்.

கே:—காங்கிரஸ் சட்டம் பெரிதா, காந்திஜியின் கட்டளை பெரிதா?

ப:—காந்திஜியின் கட்டளைதான்.

கே:—காந்திஜி சொற்படிதான் நடக்க வேண்டுமென்றால், காங்கிரஸின் சட்டங்களும் ராஷ்டிரபதி தேர்தல்களும் எதற்காக?

ப:—அதற்காகத்தான்.

கே:-காந்திஜியிடம் நம்பிக்கையிருப்பவன்தான் காங்கிரஸில் இருக்க வேண்டுமென்று காங்கிரஸ் விதி சொல்கிறதா?

ப:—இல்லை:

கே:-ராஷ்டிரபதியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு, காங்கிரஸ் சட்டப்படி என்ன வேண்டும்?

பதில்:—பெரும்பாலான பிரதிநிதிகளின் வாக்குகள் வேண்டும்.

கேள்வி:—காந்தி நம்பிக்கையில்லாத ஒருவன், பிரதிநிதிகளில் பெரும்பாலாரின் நம்பிக்கையும் காங்கிரஸ் கொள்கைப்பிடிப்பும் உடையவராக யிருந்தால் ராஷ்டிராபதியாக முடியுமா, முடியாதா?

பதில்.—காந்தி நம்பிக்கையில்லாதவன் எப்படி காங்கிரஸில் இருக்கலாம்?

கேள்வி:—ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் ரகசியமாக காந்தி நம்பிக்கைக்கு ஓட்டுச் சேகரித்தது சரியா?

பதில்:—ஸ்ரீமான் ரெட்டியாரைப்போன்ற சத்யாக்கிரகிகள் இன்னும் பொறுப்புள்ள காங்கிரஸ்காரர்களாக இருப்பதால்தான் காந்தி நம்பிக்கை இவ்வளவாவது இருக்கிறது. இல்லாவிட்டால்.........

கேள்வி கேட்டவன் செஞ்சட்டை பதில் சொன்னவன் காந்திக் குல்லாய். “பைத்தியம் தெளிந்தது உலக்கையைக் கொண்டுவா கோவணம் பாய்ச்சிக்கொள்ள” என்ற மாதிரி, விடாமல் விஷயாலோசனை செய்து வரும் 'தினமணி' “அவசர வாதிகள் கேட்கும் கேள்விகளுக்கு சட்டசபை வாசிகளும் வழவழ வாதிகளும் பதில் சொல்லுவது சுத்தத் தப்பு” என்று ஒரு தலையங்கம் அதிசீக்கிரமாக எழுதக் கூடுமென்று ஒரு பல்லி குறி சொல்லுகிறது.

# ஒற்றுமைதான் காங்கிரசின் மூலபலம்

## அ. இ. கா. சோஷியலிஸ்டுக் கட்சியின் தீர்மானங்கள்

அலகாபாத்தில் 18-19-ந்தேதிகளில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் சோஷியலிஸ்டுக் கட்சிக் கூட்டம் கீழ்க்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறது:—

### ராஷ்டிரபதி தேர்தல்

ஸ்ரீ. சுபாஷ் சந்திரபோஸ் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு ஏற்பட்டிருக்கும் கவலைக்கிடமான நிலைமையை காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சியின் நிர்வாகக் கமிட்டி கவனித்தது. நிர்வாகக் கமிட்டிக்கு, இந்த நிலைமையை ஆராய்வதில், தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் அழைக்கப்பட்டிருந்த, முக்கியமான தோழர்களின் உதவி கிடைத்தது.

காங்கிரஸ் சோஷியலிஸ்டுக் கட்சி, திட்டமான தேசியக் கொள்கைகளையும், வேலைத் திட்டங்களையும் விரும்பி, காங்கிரஸிற்குள்ளே அதை வற்புறுத்தி, அவைகளை நிறைவேற்றுவதற்காக இதர வழிகளிலும் வேலை செய்தும் வந்திருக்கிறது. ஆயினும் காங்கிரஸிற்குள்ளேயே ஒன்றோடொன்று போராடுகின்ற அல்லது, போட்டி போடுகின்ற கோஷ்டிகளாகப் பிரிப்பதை, காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சி எப்பொழுதுமே எதிர்த்து வந்திருக்கிறது. காங்கிரஸில் கூடுமான அளவுக்கு பெரிய பகுதியைக் கட்சியின் கொள்கையை ஏற்றுக் கொள்ளுமாறு செய்வதற்காக முயற்சி செய்து வந்தபோதிலும் காங்கிரஸ் பூராவையுமல்லாமல், அதன் ஒரு பகுதியை மாத்திரம் இழுத்துக்கொண்டு போவது அதன் நோக்கமல்ல. இந்தக் கொள்கையை ஆதாரமாகக் கொண்டு, தலைவர் தேர்தல் காலத்தில் கூட, பொதுக் காரியதரிசியுள்பட, கட்சியின் முக்கியஸ்தர்கள், சுபாஷ் போஸை ஆதரித்த போதிலும், அவர் தீவிர வாதிகளின் சார்பாக நிற்கும் அபேக்ஷகர் அல்லவென்றும், தேர்தலில் 'தீவிரவாதம்', 'மிதவாதம்' என்ற பிரச்சினையே கிடையாது என்றும், நன்கு விளக்கியிருக்கின்றனர். ஆகவே, சுபாஷ் பாபுவின் வெற்றி, காந்திஜியும், தேசத்தின் சிறந்த தலைவர்களில் சிலரும் தங்கள் ஒத்துழைப்பை மறுத்து விடுவார்கள் என்ற சந்தேகத்திற்கு இடமளித்திருப்பதை நிர்வாகக் கமிட்டி அறிந்து மிகுந்த கவலையடையாமலிருக்க முடியாது. மேலும், இதனால் தேசத்திற்கு ஏற்படக் கூடிய விளைவுகள் கடுமையாக இருக்குமென்றும், இக் கமிட்டி கருதுகின்றது.

இப்படிப்பட்ட நிலைமை ஏற்படுமென்று முன் கூட்டியே விஷயம் அறிந்தவர்கள் இதைத் தடுப்பதற்காக முன்னமேயே நடவடிக்கை எடுத்துக் கொள்ளாமலிருந்தது மிகவும் துரதிருஷ்டமான விஷயமாகும். ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் தலைவர் பதவிக்கு மிகவும் தகுதியுள்ள அபேக்ஷகர் எனக் கட்சி நம்பியது. அவருக்கும், கட்சிக்கும், அரசியல் பிரச்னைகளில் அதிகமாக ஒற்றுமை இருந்தது. மேலும், காங்கிரஸ் ஜனநாயக ஸ்தாபனமாகையால், மெஜாரிட்டியின் முடிவு அதிலும் குறிப்பாக அந்த முடிவு காங்கிரஸின் அடிப்படையான கொள்கைகளையும் திட்டத்தையும், மாற்றாமலிருக்கும்போது— மைனாரிட்டியால் ஏற்றுக் கொள்ளப்படுமென்று கட்சி, சிறிதும் சந்தேகமின்றி நம்பியது. மேற்கூறிய காரணங்களாலேயே, கட்சி, சுபாஷ் போஸை ஆதரித்தது.

மனோபாவ வித்தியாசங்களிருந்தபோதிலும், ஒற்றுமையே காங்கிரஸின் மூலபலமாயிருக்கிறது. சமாதானமும் நியாயமுமான வழிகளில் இந்தியாவின் பூரண சுயராஜ்யத்தை அடைவது என்ற அதன் அடிப்படையான கொள்கைக்கும் லக்ஷ்யத்திற்கும், காங்கிரஸிலுள்ள பல்வேறு கோஷ்டிகளும் செலுத்தும் பிரிக்க முடியாத நம்பிக்கையில் ஊன்றி யிருக்கிறது. இந்த ஒற்றுமை காரணம் எதுவாயிருந்தபோதிலும் ஒரு நெருக்கடி ஏற்பட்டிருக்கும் இந்த சந்தர்ப்பத்தில், இந்த ஒற்றுமையைக் காப்பாற்ற எல்லாவித முயற்சியும் செய்ய வேண்டுமென்று, நிர்வாகக் கமிட்டி திடமாக அபிப்பிராயப்படுகிறது.

இந்த ஒற்றுமையைக் காப்பாற்றுவதில் தன்னுடைய பூரண ஆதரவையும் அளிக்குமென்று, கட்சி, காங்கிரஸ் தலைவருக்கும், காந்திஜிக்கும் உறுதி கூறுகிறது.

அதே சமயத்தில் மற்றொரு விஷயத்தையும் கட்சி தெளிவாக்க விரும்புகிறது. அக்கிராசனர் தேர்தலில் கட்சிக்குள்ள பொறுப்பின் பங்கை முன்னிட்டும், ஜனநாயகக் கொள்கையைக் கட்சி கடைப்பிடித்திருப்பதை முன்னிட்டும், தேர்தல் போட்டியின் விளைவாக ஏற்படக் கூடிய பொறுப்பிலிருந்து (தங்களுக்கு இசைவில்லாத கொள்கைகளைத் தவிர,) இதர விஷயங்களில் தங்களுக்குள்ள பொறுப்பிலிருந்து—கட்சி தன்னை விடுவித்துக்கொள்ள முடியாது.

### சமஸ்தான மக்களின் போராட்டம்

மைசூர், திருவாங்கூர், ஹைதராபாத், காஷ்மீர், தென்கனால், தால்சேர், காசி, ராஜ்கோட், ஜெயப்பூர், கால்ஷியா முதலிய சமஸ்தானங்களின் மக்கள், பொருளாதார உரிமைகளுக்காகவும், பிரஜா உரிமைகளுக்காகவும், பொறுப்பாட்சிக்காகவும், மாபெரும் சக்திகளை எதிர்த்து நடத்தி வரும் போராட்டங்களுக்காக மக்களை நிர்வாகக் கமிட்டி போற்றுகிறது. இந்தப் போராட்டங்களில் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டுள்ள கட்சியின் அங்கத்தினர்களையும், கமிட்டி பாராட்டுகிறது.

பிரிட்டிஷ் இந்தியா, இந்திய-இந்தியா என்ற செயற்கையான பிரிவினைகளை காங்கிரஸ் எப்பொழுதுமே எற்றுக்கொள்ள மறுத்து வந்திருக்கிறது. மேலும், இந்தியாவை பிரிக்க முடியாத ஒரே தேசமாகவும் காங்கிரஸ் பாவித்து வந்திருக்கிறது. காங்கிரஸின் லட்சயமாகிய பூர்ண சுயராஜ்யத்தில், சமஸ்தானங்களின் சுதந்திரமும் அடங்கியிருக்கிறது. சமஸ்தானங்களில் எதேச்சாதிகாரமும், நிலச்சுவான்தாரித்துவமும் (Fudalism) ஒழிய வேண்டுமென்பது தான் இந்த லட்சியத்தின் அர்த்தமாகும். ஆகவே, சமஸ்தான மக்களின் போராட்டம், தேசியப் போராட்டத்தின் பிரிக்க முடியாத ஒரு பகுதியென்றும், இந்தப் போராட்டத்திற்கு தீவிரமாக உதவி அளிப்பது காங்கிரஸின் முதற் கடமையென்றும், கட்சி எப்பொழுதுமே அபிப்ராயப்பட்டிருக்கிறது. தற்சமயம் பல்வேறு சமஸ்தானங்களில் நடக்கும் மக்களின் போராட்டம், பிரிட்டிஷ் இந்திய மக்களுக்கு எதிரியாயிருப்பது போலவே, சமஸ்தான மக்களுக்கும்உண்மையான எதிரி ஏகாதிபத்யம் தான் என்பதை நன்கு விளக்கிவிட்டது. பொது மக்களின் இயக்கத்தை நசுக்குவதற்காக, மன்னர்களின் சார்பாக, ஏகாதிபத்தியம் தலையிட்டு வருகிறது.

சமஸ்தான மன்னர்களின் திரை மறைவில் நடத்தும் இந்த அடக்குமுறை இயக்கம், நாட்டின்மீது சமஷ்டி திட்டத்தைச் சுமத்துவதற்காக நடத்தப்படும் ஏற்பாடுகளின் பகுதி என்பதைக் கமிட்டி சுட்டிக் காட்ட விரும்புகிறது. ஆகவே, பிரிட்டிஷ் இந்தியாவில் தேசியப் போராட்டத்தை வளர்க்கும் அதே சமயத்தில்— ஏககாலத்திலேயே சமஸ்தான மக்களின் போராட்டத்தையும் வளர்ப்பதால்தான், சமஷ்டியைத் திணிப்பதற்காகச் செய்யப்படும் முயற்சியை வெற்றிகரமாக எதிர்க்க முடியும் என்பதைக் கமிட்டி அழுத்தமாக எடுத்துரைக்க விரும்புகிறது.

காந்திஜி, இந்த இயக்கத்தில் மனப்பூர்வமாக ஈடுபட்டிருக்கிறார் என்பதையும், இந்தப் பிரச்னையை அகில இந்தியப் பிரச்னையாக ஆக்க விரும்புகிறார் என்பதையும், கண்டு, கமிட்டி மிகவும் சந்தோஷப்படுகிறது.

ஆகவே, திரிபுரியில், கூடும் காங்கிரஸ், சமஸ்தான மக்களின் போராட்டத்திற்கு காங்கிரஸ் ஸ்தாபனம் தீவிரமான ஆதரவு அளிக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்து, தனது வேலைத் திட்டத்தில் இதற்கு முக்கியமான இடமளித்து,பிரிட்டிஷ் இந்தியாவில் போராட்டத்துடன் இணைத்து விடுமென்று நம்பப்படுகிறது. சில சமஸ்தானங்களிலுள்ள பெரும்பான்மையான மக்கள்ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்தவர்களாயிருக்கின்றார் என்ற காரணத்தாலேயே, சமஸ்தான மக்கள் ஜனநாயக உரிமைகளுக்காக நடத்தும் போராட்டத்தில், வகுப்புவாதப் பூசல்களைக் கிளப்பி, பிரச்சினையை மறைப்பதற்காக செய்யப்படும் முயற்சிகளைக் கண்டு யாரும் ஏமாறாமலிருக்க வேண்டுமென்று, கமிட்டி எச்சரிக்கை செய்ய விரும்புகிறது.

சமஸ்தானங்களில் நடக்கும் இயக்கங்களுடன் தொடர்புள்ள ஸ்தாபனங்களும் கட்சிகளும், சமஸ்தான மக்களின் போராட்டங்களுக்கு தீவிர உதவியளித்து அதில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், பொதுவாக கட்சி அங்கத்தினர்கள் இந்த வேலையில் சாத்தியமான எல்லா உதவியும் அளிக்க வேண்டுமென்றும் கமிட்டி கேட்டுக்கொள்ளுகிறது.

### திரிபுரிக் காங்கிரஸ்

காங்கிரஸ் கொள்கைகளை ஆதாரமாகக் கொண்டு, சமீப காலத்தில் தேசத்தில் ஏற்பட்டுள்ள அரசியல் நிலைமையை ஆலோசித்ததன் பயனாக, திரிபுரியில் நடக்கும் காங்கிரஸ் 1929-ம் வருஷத்தில் லாகூரில் நடந்த காங்கிரஸைப்போன்றே தேச சரித்திரத்தையே திருப்பக்கூடியதாக இருக்க வேண்டுமென்று நிர்வாகக் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

சமீபத்தில் சிறிது காலமாக, அதிலும் குறிப்பாகக் காங்கிரஸ்

(17-ம் பக்கம் பார்க்க)

# மலையாள ஜன்மி முறைக்குச் சாவு மணி

புரபஸர் என். ஜி. ரங்கா,
(பொதுக்காரியதரிசி, அகில இந்தியக் கிஸான் சபை)

மலையாள முன்னேற்றம் மதிக்கத் தகுந்தது. 35 லக்ஷம் குடி மக்கள் கொண்ட இந்த மாகாணம், மற்ற மாகாணங்களுக்கு வழி காட்டியாகி முன் நிற்கின்றது. மாகாண காங்கிரஸ் கமிட்டியும், அதிகாரிகளும் சோஷியலிஸ்டுகள். இங்கு நெடுங்காலமாக கிசான் பிரசாரம் பலமாக நடைபெற்று வந்திருந்தாலும், காங்கிரஸ், சோஷியலிஸ்டுகளும், மற்றும் ஸ்தல காங்கிரஸ் அதிகாரிகளும், நிர்மாண வேலையிலும், தேர்தல் முயற்சியிலும் தீவிரமாக ஈடுபட்டிருந்ததால், மாகாண கிசான் சங்கம் தாமதப்பட்டது. 6 மாதத்திற்கு முன்பு தான் தோழர்களான எ. கே. கோபாலன், கே. கேரளீயன், பிராராண் நாயர் முதலியோர் கிசான் சபை அமைப்புகளுக்கு முனைந்தனர். மலையாளத்துக்கு ஜன்மீ முறை விடுத்த சவாலுக்கு எந்த விவசாயியும், கிசான் தோழனும் தப்புவிக்க முடியாது. இந்த ஜன்மி முறையானது, மற்ற ஜமீன்களைப் போல அல்ல. மற்ற ஜமீன்கள் எல்லாம், பிரிட்டிஷ் சர்க்காருக்கு வரி வசூல ஏஜண்டுகளாகி அவசியமானால், சமாதானத்தை நிலை நாட்டவும் அங்கீகரிக்கப் பட்டவை. ஜன்மி முறையும், உரிமையும் அப்படி அன்று. மலையாளத்தில் உள்ள நிலம்காடு, நதிகள், உலோக உற்பத்திகள் பலவற்றிற்கும் சொந்தக்காரர்களென அங்கீகரிக்கப் பட்டவை.

இப்படி சர்க்கார் இவைகளை அங்கீகரித்திருந்தது பெரும் தவறாயினும், கிசான்கள் சம்பந்தப் பட்ட வரையில் இம்முறையும், உரிமைகளும் அடியோடு ஒழிக்கப்படும் வரையில், கிசான்கள் கிளர்ச்சி அடங்கப் போவதில்லை. 1934-ல் மலையாளத்திற்கு நான் சென்றபோது, இதனையே கிசான்களுக்குக் கூறினேன். மலையாள தோழர்கள், இதனையே முதல் போராட்ட பிரச்னையாக்கியதும், கிஸான்கள் அதனை வரவேற்று நிற்பதும் போற்றத் தக்கது.

மலையாள ஜன்மிகள், இத்தனை விபரீதம் கிசான் சபாக்காரர்களால்தான் ஏற்பட்டது. இதற்கு முன், கிசான்கள் சிறிதும் ஜன்மிகளிடத்து அதிருப்தி காட்டியதே கிடையாது. ஜன்மிகளுடன் விஸ்வாசமாக இருக்கக் கூடியவர்கள் கிசான்கள் என்றார்கள். இது உண்மையல்ல.

மலையாளத்தில், கிசான்கள் கொடுமையாளர்களாயும் பயிரிடும் குடியானவர்கள் அவர்கள் கையில் தட்டுமுட்டு சாமான்களைவிட கேவலமாகவும் நடத்தப்பட்டனர். இது நிற்க, இந்த ஜன்மிகள், கிசான்கள், குடியானவர்கள் இவர்களின் சமூகத்துள் புகுந்து செய்து வந்துள்ள அட்டூழியம் சொல்லத்தரமல்ல. பயிர்த் தொழில் நடத்தும் நாயர் பெண்களை கெடுப்பதும், வைப்பாக வைத்துக் கொள்வதும், அப்படி சந்ததிகளாயின், எவ்வித உரிமையுமின்றி தவிக்க விடுவதும், ஜன்மிகள் வழக்கம். விளையும் பயிரிலும் பெரும்பாகம் ஜன்மிகளுடையது, அறுவடையான பின் விளைந்து அறுபட்ட குறுத்துகளை எண்ணி, நெல் விளைவு கணக்கிடுவதும், களத்திலிருந்தே அதிகப்படி அளவுள்ள ஜன்மி மரக் கால்களால் அளந்து, எடுத்துக் கொள்வதும், வீட்டிற்கு சேர உள்ள செலவு அளக்கும் செலவு பலவும் குடியானவர்கள் கொடுக்க வேண்டும் என்று விதித்தும், ஜன்மிகள் அட்டூழியம் நடத்தி வந்தனர். குத்தகை விவரம் கிடையாது. ஜன்மிகள் இஷ்டமே சட்டம், நிலவரம். கேவலமான இழி தொழில்களும் குடியானவர்கள் ஜன்மிகளுக்கு செய்தாக வேண்டும்.

இத்தனையில் குடியானவர்கள் பகுத்தறிவும், முன்னேற்ற போக்கும் கொண்டவர்களாயிருந்தார்கள். ஜன்மிகள் கொடுமை அனுபவித்து தவித்துவந்த இவர்கள் 'ஜன்மி முறையை ஒழியுங்கள்.' என்ற குரல் எழும்பியதும், ஆவேசத்துடன் எழுந்து ஒன்றானார்கள்.

## ஜன்மி முறை ஒழிக.

ஜன்மிகள் அவர்கள் எல்லையில் சர்வாதிகாரிகள், அவர்கள் முன் சுதந்திர உணர்வுகொண்ட குடியானவன் உயிர்வாழ முடியாது. செல்வத்துறையிலும், உயர்தல் முடியாது. ஜீவிப்பதே கஷ்டம். அங்குள்ள பயிர் செய்யும் குடியானவர்களும் அவர்கள் பெண்டு பிள்ளைகளும், பணியர் வேட்டுவர் வகுப்பை சார்ந்தவர்கள். அவர்கள் இனமே இன்று நசித்து விட்டதெனலாம். காரணம் ஜன்மி கொடுமையே. இவர்கள் ஜன்மிகளின் சொந்த சொத்துகள், இவர்களை பிறிதொரு ஜென்மிக்குள் ஜென்மி அடமானம் வைப்பதும் விற்பதும் உண்டு. ஜன்மி வீட்டுப் பெண்களுக்கு ஸ்ரீதனமாகவும் இவர்களை கொடுப்பதுண்டு, கிஸான் இயக்கம், இவர்களுக்கு புத்துயிரளித்துவிட்டது. விழித்தெழுந்துள்ள வேகம் அளவிட முடியாதது. ஜன்மி முறை ஒழிந்தாலன்றி இந்த வேகம் அடங்காது.

தற்போதுள்ள அரசியல் சட்டப்படி ஜன்மி முறையை ஒழிக்க இயலாது. ஆயினும், உழைத்துழைத்துத் தவிக்கும் குடியானவர்களும் ஜன்மிகளும் கவுரவமாக வாழ இருதிறத்தாரின் உரிமைகள் சம்பந்தா சம்பந்தம் நிர்ணயப்பட வேண்டுவது அவசியம்.

ஜன்மிகளுக்கு நஷ்ட ஈடு கொடுத்தேனும் கஷ்டத்தை நிவாரணம் செய்யவேண்டுமானால் தற்போதுள்ள நிலவரி முறையே மாற்றப்படவேண்டும்.

இதனால்தான் மலையாள கிஸான்களுக்கு, அடியில்கண்ட மாற்றத்தை உடனே செய்தாக வேண்டும்.

(1) வாடகை சரிபாதியாக வேண்டும்.

(2) புதிதாக வரி யுயர்த்தலை தடுப்பது.

(3) எல்லா நிலங்களையும் மீண்டும் அளவிடுவது.

(4) தானிய வாடகை ஒழித்து ரொக்க வாடகைவிதிப்பது.

(5) விலை வாசிக்குத் தக்க வாடகை விதிப்பது.

(6) அறுவடைகளை ஓர் ஒழுங்கில் திட்டம் செய்வது.

(7) மலைமீது பயிர்செய்யப்பட்ட மிளகு நெல் இன்னும் மற்ற சாகுபடிகளை சட்டத்தின் கீழ் கொண்டு வருவது. இத்தனையும் செய்ய உடனே மலையாள குடிவார மசோதா திருத்தப்பட வேண்டும்.

## காட்டுப் பஞ்சாயத்துத் தேவை

இன்னும் கேடானது என்னவெனில், காடுகளும், மலைகளும் ஜன்மிகளுக்கு சொந்த சொத்தாக இருப்பது. இத்துடன் மலைகளையும், காடுகளையும், வளமாக்கி நாட்டின் செல்வ நிலைமை உயர்த்த வேண்டிய அவசியத்தையும் கிசான்கள் உணர்ந்திருக்கிறார்கள். இதனை ஜன்மிகள் செய்வார்கள் என்று எண்ணுவது பகற்கனவே. அவர்களுக்கு தங்கள் நாட்டின் செல்வத்தை விருத்தி செய்வதற்கான அறிவுமில்லை, உணர்வுமில்லை, ஆற்றலுமில்லை. ஆகையால், நியாயமான ஈடுகொடுத்து இந்த நிலப் பரப்பு பலவும் ஜன்மிகளிடமிருந்து ஏதேனும் ஓர் சர்க்காரிடம் ஒப்புவித்து நன்மை தேடுவதே வேண்டற்பாலது.

மரம் வளர்க்க தகுதியற்ற காடுகள், விவசாயத்திற்கேற்றதாய் பல இருக்கின்றன. அவற்றில் விறகுகள் சேகரிக்கவும், விவசாயம் செய்யவும் கிசான்களிடம் அவைகளை விடுவது நன்மை தரும். இதற்கு ஓர் தேர்தல் நடத்தி, தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை பஞ்சாயத்தாக அமைத்து, காட்டுப் பஞ்சாயத்தென நியமித்து, பலதிறப்பட்ட விருத்திகளும் செய்ய வழிகள் இருக்கின்றன. சர்க்கார் இவ்வித பஞ்சாயத்துக்களை நியமித்து, ஓர் பாகம் லாபம் அடைவது போல், இந்த ஜன்மிகள் நிலத்திற்கும் பஞ்சாயத்து ஏற்படுத்தி நிலங்களுக்கு சிறிது வாடகை விதிக்கலாம். எந்த ஒரு காலத்தில், இந்த இரண்டு சீர்திருத்தங்களும், முயற்சிக்கப்பட முனைந்தோமோ, மலையாள கிசான்கள் அடியோடு ஜன்மி முறை அழிய சிறுது பொறுமை காட்டுவது தவறன்று. அப்படி நடைபெறுங்கால் பலவும் விவசாயிகள், குடியானவர்கள் சொந்தமாக மாற்றப்படும்.

## அருமைத் தொண்டு

இந்த கோரிக்கைகளை துரிதமாய் அடைய, மலையாள கிசான் சபைகள், குறுகிய காலத்தில் அழகான இயக்கத்தை தயாரித்துளது. மாகாண கமிட்டி தனிப்பட்ட முயற்சியாக தொண்டர் படை திரட்டி தயாரித்து, சேவாதளம் சேர்த்திருப்பது போற்றக் கூடியது. தற்போது இந்த தொண்டர் படையைக்கொண்டு, காசர்கோட், கோட்டயம், சிராக்கல் தாலுக்காக்களில் நான் போன விடங்கள் எல்லாம், ஒழுங்காக தயாரிக்கப்பட்ட இந்த தொண்டர்கள், கூட்டங்களை அமைதியாக நடத்தவும், மகாநாடுகள் நடத்தவும், ஒழுங்கை நிலை நாட்டவும் அரிய வேலை செய்திருப்பதைக் கண்டேன். இவர்கள் பலரும் சென்று கிசான் சபை அல்லது மஜ்தூர் சபைகள் இவைகளின் ஆதரவில் தான் நிற்கிறார்கள். இத்துடன் சிறு குழந்தைகளும் திரட்டப்பட்டு பால பாரத சங்கத்தின் கீழ் தயாரிக்கப்பட்டிருக்கின்றனர். சிறுவர்கள் பாடும் கிஸான் பாட்டுகள் இனிமையாய் இருக்கிறது.

பெண்களும் கிசான் சபைகள் அமைத்துக்கொண்டு ஜன்மி முறையை ஒழிக்க ஆண்களோடு ஒத்துழைத்து கிளர்ச்சியில் முனைந்துள்ளார்கள். மலைகளிலும் மடுக்களிலும், காடுகளி

(18-ம் பக்கம் பார்க்க)

காங்கிரஸ், சமஸ்தானங்களில் நடக்கும் போராட்டங்களில் நேரடியாக பங்கெடுத்துக் கொள்ளக் கூடாதென்ற தீர்மானம் சென்ற வருடம் ஹரிபுரா காங்கிரஸில் வந்ததும், அதை சோஷியலிஸ்டுகளும் இதர காங்கிரஸ் வாதிகளில் பலரும் சேர்ந்து ஒரு முகமாக எதிர்த்தனர். ஆனால் செல்வாக்குள்ள சில தலைவர்கள் அதை தங்கள் முழு பலத்துடன் எதிர்த்ததால், அந்தத் தீர்மானம் நிறைவேறாமல் போய்விட்டது. ஆனால் திரிபுராக் காங்கிரஸ் நடப்பதற்கு முன்னால், அன்று எதிர்த்தவர்களே இன்று காங்கிரஸ் சமஸ்தான விஷயங்களில் தலையிட வேண்டும் என்ற முடிவிற்கு வந்து விட்டனர். ஹரிபுராக் காங்கிரஸ் முடிவடைந்ததும், சமஸ்தான நடு நிலைமைக் கொள்கையை எதிர்த்த காங்கிரஸ்வாதிகள், தேசத்தில் பலத்த பிரசாரம் செய்து காங்கிரசின் நடுநிலைமைக் கொள்கைக்கு தேசத்தின் ஒரு முகப்பட்ட எதிர்ப்பைத் திரட்டியும், அனேக சமஸ்தானங்களில் நடந்த பொறுப்பாட்சிக் கிளர்ச்சியில் நேரடியாக பங்கெடுத்தும், அதற்கு தலைமை வகித்தும் போராட்டத்தை நடத்தி வந்த செய்கை, நடு நிலைமைக் கொள்கை வேண்டுமென்ற தலைவர்களையும் அதை விட்டுவிடும் படியாகச் செய்துவிட்டது.

ராஜ்கோட்டில் சர்தார் பட்டேலும், ஜெயப்பூரில் ஜமன்லால் பஜாஜும் நேரடியாக தலையிட ஆரம்பித்ததும், அகில இந்திய சமஸ்தானப் பிரஜைகள் மகாநாட்டிற்கு பண்டித ஜவஹர் தலைமை வகித்து, பிரிட்டிஷ் இந்தியப் போராட்டத்தையும் சமஸ்தானப் போராட்டத்தையும் இணைத்து சமஷ்டிச் சனியனை தொலைக்க வேண்டுமென்ற முடிவிற்கு வந்ததும், மீண்டும் ராஷ்டிரபதி போஸ் காங்கிரஸ் அக்கிராசனரானதும், தேசத்தில் எங்கும் யுத்த சங்கநாதம் முழங்குவதைத்தான் நாம் இன்று காண்கிறோம். இதற்கு முன் தலைவர்கள் சொன்னார்கள்—மக்கள் தளர்ச்சியடைந்துவிட்டார்கள் என்று. ஆனால் இன்று மக்கள் விழிப்படைந்து போர் முரசு கொட்டும் காலத்தில் தேசத்திலுள்ள பழுத்த சில தலைவர்கள் ராஷ்டிரபதியுடன் ஒத்துழைக்க மறுக்கின்றனர். ராஷ்டிரபதி எல்லாவித முயற்சியும் செய்து, பொதுமக்களின் உணர்ச்சி வேகத்தை சரியான பாதையில் திரிபுரிக் காங்கிரஸ் மூலம் செலுத்துவார். காங்கிரசில் பிளவேற்படாமலிருக்க தன்னாலான எல்லாவித முயற்சியும் செய்வார்.

திரிபுரி செய்யும் முடிவை எல்லாக் காங்கிரஸ் வாதிகளும் பின்பற்றி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் சர்வதேச ராஜீய நிலைமையில பலஹீனப்பட்டிருக்கும் இந்த சந்தர்ப்பத்தை நமக்கு சாதகமாக உபயோகித்துக் கொண்டு தேசத்திலிலுள்ள எல்லோரும் ஒன்றுபட்டு வேலை செய்வதின் மூலம் காங்கிரஸ் லட்சியமாகிய பரிபூரண சுதந்திரத்தை நாம் நிச்சயம் அடைய முடியும்.

# சமஸ்தானப் போர்

காங்கிரசில் ஐக்ய முன்னணி வளர்க !

* * *

## திருவிதாங்கூர்

இங்குள்ள சமஸ்தானக் காங்கிரஸ், திவான் மீதுள்ள குற்றச்சாட்டை காந்திஜி சொல்லியபடி வாப்பஸ் வாங்கிய பின்னால், சமஸ்தானக் காங்கிரஸ் வாதிகள் சமஸ்தானம் முழுவதும் பொறுப்பாட்சியின் அவசியத்தைப்பற்றியும், சமஸ்தானக் காங்கிரசின் லட்சியத்தைப் பற்றியும் எதிர்காலப் போராட்டத்திற்கு மக்கள் தயாராய் இருக்கவேண்டிய அவசியத்தைப் பற்றியும் தீவிரப் பிரச்சாரம் செய்து வந்தனர். சர்க்காரும் விடாமல் சமஸ்தானக் காங்கிரஸ் தலைவர்களைக் கைது செய்தும், இளைஞர் சங்கத் தலைவர்களைக் கைது செய்வதும் பொறுப்பாட்சிக் கிளர்ச்சியில் ஈடுபட்டு சிறைசென்ற குற்றத்திற்காக சட்டசபையில் அங்கம் வகிக்கும் 19 சமஸ்தானக் காங்கிரஸ் வாதிகளை சட்ட சபைக்கு வர லாயக்கற்றவர்கள் என்று சர்க்கார் தீர்ப்பளித்ததையும், மாணவர் பெடரேஷன் தலைவரையும், காரியதரிசியையும் அக்கிரமமாக கைது செய்ததையும் பார்த்து வருகிறோம். சிறையில் தலைவர்கள் கொடுமைப்படுத்தப்படுகிறார்கள்.

லூதியானாவில் நடைபெற்ற அ. இ. சமஸ்தான பிரஜைகள் மகாநாடு, திருவிதாங்கூர் மக்களை போராட்டத்தை நடத்த அனுமதியளித்திருக்கிறது. காந்திஜீயும் சமீபத்தில் ஒரு அறிக்கையில் சர்க்கார் செய்கையைக் கண்டித்திருக்கிறார். விரைவில் திருவிதாங்கூரில் முன்னைவிடப் பெரியதோர் போர் ஆரம்பமாகும். அப்போரில் தமிழ்நாட்டு சோஷியலிஸ்டுகள் தக்க பங்கெடுத்துக் கொள்வார்கள்.

## மைசூர்

இங்கு சர்க்காருக்கும் பொது ஜனங்களுக்கும் அதிருப்தி மலை போல் வளர்ந்து வருகிறது. சமஸ்தானக் காங்கிரஸினிடம் மக்கள் பள்ளத்தை நோக்கிசெல்லும் ஜலம்போல் விரைந்து செல்லுகின்றனர். இங்கும் சில தலைவர்கள் கைது செய்யப்பட்டு வழக்குகள் நடைபெற்று வருகின்றதையே நாம் பார்க்கிறோம். இங்கும் விரைவில் ஒரு போராட்டம் நடைபெறும். காந்திஜியின் யோசனையைக் கேட்க சமஸ்தானக் காங்கிரஸ் தலைவர்கள் வார்தா சென்றனர். ஆனால் காந்திஜி அவர்களிடம் அ. இ. சமஸ்தான மகாநாட்டுத் தலைவர் ஜவஹரைக் கேட்கச் சொல்லியிருக்கிறார்.

## ஹைதராபாத்

இங்கு சமஸ்தானக் காங்கிரஸ் நடத்திவந்த போர் காந்திஜி யோசனைப்படி முன் நிறுத்தப்பட்டது. ஆனால் சர்க்கார் மட்டும் சிறையிலிருக்கும் சத்யாக்கிரகிகளை விடுதலை செய்யவில்லை. பொறுப்பாட்சிக் கிளர்ச்சியை வேருடன் அழிக்க சர்க்கார் "பொதுஜனப் பாதுகாப்புச் சட்டம்" என்று ஒன்றைக் கொண்டு வந்திருக்கின்றனர். இதற்கு பலத்த எதிர்ப்பு இருக்கிறது. வார்தாவிற்கு, ஹைதராபாத் காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டியினர் சென்று காந்திஜியைக் கண்டு அவரது யோசனைக் கேட்டனர். காந்திஜி இன்னும் போரை ஒத்திப் போடுங்கள் என்று கூறியிருக்கிறார்.

## ராஜ்கோட்

இங்கு சமஸ்தானக் காங்கிரசிற்கும் சர்க்காருக்கும் ஏற்பட்ட சமரச ஒப்பந்தம், வெள்ளை அதிகாரியாகிய ரெஸிடெண்டின் தலையீட்டால் முறிந்தது. உடனே மக்கள் தங்கள் யுத்த கோஷம் செய்ய ஆரம்பித்தனர். இப்போரில் அன்னை கஸ்தூரி பாயும், மணிபென் பட்டேலும் கலந்து சிறை சென்றது சமஸ்தான மக்கள் போரிற்கே ஒரு புதிய உத்சாகத்தை அளித்து விட்டது. முதலில் சர்க்கார், கஸ்தூரிபாய் காந்தியையும் மணிபென் பட்டேலையும் பிரித்து வைத்தனர். இருவரும் சுகாதாரமற்ற மோமான இடத்தில் வைக்கப்பட்டிருந்தனர். மணிபென் பட்டேல் இதை எதிர்த்து உண்ணாவிரதமிருக்கவே, சர்க்கார் தாங்கள் பிரித்து வைத்திருப்பதை மாற்றி விட்டனர். ஏராளமான மக்கள் கைதியாய்க் கொண்டே வருகின்றனர்.

இந்தப் போராட்டத்தில் பண்டித ஜவஹரின் சகோதரியும் ஐக்ய மாகாண ஸ்தல சுய ஆட்சி மந்திரியுமாகிய ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட், "சரியான சமயத்தில் ராஜ்கோட் போரில் கலந்து கொள்வோம்" என வார்தாவில் பத்திரிகை நிருபரிடம் கூறியிருக்கிறார்.

தமிழ் நாட்டிலிருந்தும் ராஜ்கோட்டிற்கு 8 பேர்கள் கொண்ட ஜதா ஒன்று செல்கிறது.

## ஜெயப்பூர்

இந்த சமஸ்தான வாசியும் பிரஜா மண்டலின் தலைவரும் அ. இ. காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினருமான ஸ்ரீஜத் பஜாஜ் சமஸ்தானத்தின் உள்ளே வரக் கூடாதென சர்க்கார் தடை விதித்தனர். இதை தேசத்திலுள்ள பல தலைவர்களும், காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டியும் கண்டித்தது பஜாஜியும், சர்க்காருக்கு சந்தர்ப்பம் அளித்தார். சர்க்கார் தடையை வாபஸ் வாங்காது போகவே பஜாஜ் சமஸ்தான சர்க்காரின் தடையை மீற புறப்பட்டுச் சென்றார். பஜாஜியை மக்கள் வழியனுப்பி வைத்தனர். ஜெயப்பூர் வெள்ளை போலீஸ் அதிகாரி ஒருவர் பாஜாஜியை ஏமாற்றி மோட்டாரில் ஏற்றி சமஸ்தானத்திற்கு வெளியே கொண்டுவந்து விட்டுவிட்டார். ஜெயப்பூர் சமஸ்தான எல்லையில் மூன்றும் முறையாகக் கைது செய்யப்பட்ட பாஜாஜ், ஜெயப்பூர் நகருக்கு 74 மைலுக்கு அப்பாலுள்ள மோரான் சாகரில் இன்று காவலில் வைக்கப்பட்டிருக்கிறார். ஒரு போலீஸ் அதிகாரியும் 8 கான்ஸ்டேபிள்களும் காவல் புரிந்து வருகின்றனர்.

ஜெயப்பூருக்கு, வெளி ஊர்களிலிருந்து தொண்டர்கள் ஜதா, வந்துகொண்டே இருக்கின்றன. போலீஸ் தர்பார் கோர சொரூபத்துடன் நர்த்தனம் புரிகின்றது. பிரதிதினமும் பலர் கைது செய்யப்பட்டு வருகிறார்கள். சிறையில் மோசமான உணவு கொடுப்பதை எதிர்த்து கைது செய்யப்பட்ட பிரஜா மண்டல ஊழியர்கள் உண்ணாவிரதம் இருந்து வருகின்றனர்.

## ஓர்ச்சா

இந்த சமஸ்தானம் ஐக்கிய மாகாணத்திலுள்ள ஜான்ஸி ஜில்லாவிலிருக்கிறது. சமஸ்தானப் போலீஸார் பிப்ரவரி 18-ந் தேதி ஐக்கிய மாகாண எல்லையிலுள்ள கிராமத்தில் ஜனங்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். அதனால் மூன்று பேர்கள் காயமடைந்திருக்கின்றனர். இது சம்மந்தமான விவரத்தை உடனே அனுப்புமாறு பிரதம மந்திரி பண்டித கோவிந்த வல்லபந்த தந்தியில் ஜான்ஸி ஜில்லா மாஜிஸ்திரேட்டிற்கு கட்டளையிட்டிருக்கிறார்.

இந்தத் துப்பாக்கிப் பிரயோகத்தைப் பற்றி ஜவஹர்லால் நேரு ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அதில் "இந்த சமஸ்தான அதிகாரிகள், அவர்களுடைய பிரஜைகள் மீது போர் தொடுத்தால், ஐ. மா. சர்க்கார் எந்தவித உதவியும் செய்ய மாட்டார்கள்" என்று கூறியிருக்கின்றார்.

(19-ம் பக்கம் பார்க்க)

# ஜில்லா போர்டுகள் என்ன செய்யவேண்டும்?

## தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் திட்டம்

"பூபதி"

காங்கிரஸ் தேர்தல்களில் பிரதிநிதிகளை நியமித்ததுமுதல் பல ஸ்தாபனங்களில் காங்கிரஸ் மெஜாரிட்டி பெற்றுவிட்டது. இந்த ஸ்தாபனங்களனைத்தும்-சட்டசபை முதற்கொண்டு,-கிராமப் பஞ்சாயத்து வரையுள்ளவைகள் எல்லாம்-பிரிட்டிஷ் அதிகாரத்தால் ஏற்படுத்தி, சில காரியங்களைச் செய்ய அதிகாரம் பெற்றவை. இவைகளைக் கைப்பற்றிய பின்-தேசீய சுதந்திர இயக்கம் கைப்பற்றிய பின்-இந்த ஸ்தாபனங்களில் பதவி ஏற்றுக்கொண்டு விட்டது காங்கிரஸ்.

சட்டசபைகளில் பதவி ஏற்றுக்கொண்டபொழுது காரியக் கமிட்டி அதன் நோக்கத்தையும், அங்கு காங்கிரஸ்காரர்கள் செய்ய வேண்டிய வேலைகளையும் பற்றித் தீர்மானம் செய்திருக்கின்றது. ஆனால் ஸ்தல ஸ்தாபனங்களாகிய, ஜில்லா போர்டுகள், முனிசிபாலிட்டிகள் இவற்றில்காங்கிரஸ்காரர்கள் என்ன செய்ய வேண்டுமென்பதைத் தனியாகக் குறிப்பிடவில்லை. தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டி தற்சமயம் காங்கிரஸ்காரர்கள் மெஜாரிட்டி பெற்றுள்ள போர்டுகளில் என்ன செய்ய வேண்டுமென்று ஒரு திட்டம் வகுத்து இருக்கின்றனராம். அந்த திட்டத்தை முன்னரேயே காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களிடம் கூடிக் கலந்து வகுத்திருந்தால், ஆழ்ந்த யோசனையுடன் பல வேலைகளைச் சரிவரக் குறிக்கக்கூடும். அவ்வாறு செய்திருக்காவிடினும் அத்திட்டத்தைக் கண்ட பிறகேனும் நமது ஜில்லா போர்டுகளில் காங்கிரஸ்காரர்கள் என்ன செய்ய வேண்டுமென்கிற விஷயத்தை சற்று கவனிக்கும் சந்தர்ப்பம் வாய்த்து விட்டது.

ஜில்லா போர்டுகளில் சட்டசபை போன்ற அதிகாரம் கிடையாது. அவைகளுக்கு மாகாண மந்திரிசபை போன்ற வருமானமும் கிடையாது. போர்டுகளும் முனிசிபாலிட்டிகளும் நமது தேசத்தில் பிற தேசங்களைப் போலல்லாது மத்திய அதிகாரத்திற்கு உட்பட்டதாகவும், அதிகார வர்க்கத்திற்கடங்கியனவாகவும் இருந்து வந்தன.

ஜில்லா போர்டுகள் செய்யக் கூடிய வேலைகள் என்ன? ரஸ்தாக்களைச் சீர்திருத்தலாம்; சுகாதார பாதுகாப்புக்கும், வைத்திய உதவிக்கும் ஏற்பாடுகள் செய்யலாம்; கல்வியைப் பரப்பி வளர்க்கலாம்; இதர சில்லரை சௌகர்யங்கள் செய்யலாம். ஆனால் இவை அனைத்தும் இதுவரை பதவி வேட்டைக்காரர்களிடமும், சந்தர்ப்ப வாதிகளிடமும், சுயநலக்காரர்களிடையிலும் இருந்தபடியால், இச்சிறு அதிகாரமும் பொதுவாக மக்களுக்கு நலமளிக்கவில்லை. லஞ்சமும், சிபார்சுகளும் இந்த ஸ்தாபனங்களின் நிர்வாகத்தில் செழித்தோங்கின.

இந்த ஸ்தாபனங்களில் நமது மாகாணம் முழுவதிலும் சுமார் 2000 க்கு மேற்பட்ட அங்கத்தினர்கள் இருக்கின்றனர். தமிழ்நாட்டிலுள்ள ஸ்தல ஸ்தாபன காங்கிரஸ் அங்கத்தினர்கள் ராஜபாளையத்தில் ஒரு முறை கூடினார்கள். ஓரே நோக்கங்கொண்டு, காங்கிரஸின் வேலையில் உண்மையில் ஈடுபட்ட தொண்டர்களனைவருக்கும் இந்த ஸ்தாபனங்களை நடத்துவதில் மக்களை வளர்த்து, உணர்ச்சி ஊட்டக் கூடிய சந்தர்ப்பம் விசேஷமாய் ஏற்பட்டுள்ளது.

ஸ்தல ஸ்தாபனங்களுக்கு தற்போது உள்ள அதிகாரத்தை முற்றிலும் ஜனங்களின் நலத்திற்கு உபயோகித்துவிட வேண்டும்.

முதலாவதாக ரஸ்தா பாதுகாப்பு விஷயத்தில் ஜில்லா போர்டுகள் எல்லா கிராமங்களுக்கும் ரஸ்தா வசதி ஏற்படுத்துவதுடன், கல்வி, சுகாதாரம், போக்குவரத்து சாதனங்களை அளிக்கவும் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இந்த வசதிகளை ஏற்படுத்த ஸ்தல ஸ்தாபனங்களுக்குப் போதிய வருமானம் இல்லாவிடில் மாகாண கவர்ன்மெண்டார் கிராண்டுகள் கொடுத்து உதவ வேண்டும். நமது ஜில்லா போர்டுகள் ஒரு கோடி ரூபாய்களுக்கு மேல் செலவு செய்கின்றன. இதற்கும் மேல் பண உதவி அளிக்க மாகாண கவர்ன்மெண்டால் முடியாவிட்டால், ஸ்தல ஸ்தாபன அபிவிருத்தி நிதி ஏற்படுத்தி, அதற்கெனத் தனியாக ஒரு கவர்ன்மெண்ட் கடன் வாங்க வேண்டும்.

ரஸ்தாக்கள் பாதுகாப்பு விஷயத்தில் நமது ஜில்லா போர்டுகள் ஒவ்வொரு கிராமத்துக்கும் சரியான ரோடுகள் ஏற்படுத்த முயலவேண்டும். காங்கிரஸ் தேர்தல் பிரசாரத்திலேயே போக்குவரத்து சாதனங்களையும், பொதுஜன சௌகர்ய வியாபாரங்களையும் (Public Utility Services) ஸ்தாபனங்களை நடத்த வேண்டும் என்றுகூறினோம். தற்சமயம் ரஸ்தாக்களின் சீர்திருத்தத்தாலும் புதிய விதிகளாலும் பஸ், டிராம், கம்பெனிகளில் ஏகபோக மேற்பட்டு வருகின்றது. ஜில்லா போர்டுகள் அவற்றை நடத்த முன் வந்து, ஜனங்கள் சௌகர்யத்தை அதிகரிக்கலாம். அத்தொழில்களில் வரும் லாபத்தையும் அடையலாம்.

த. நா. காங்கிரஸ் கமிட்டி திட்டத்தில் கூலி விகிதத்தை உத்தேசித்து, தற்போதைய எஸ்டிமேட்டுகளிலேயே அதிக மைல்களைப் பராமரிக்க முடியும் என்றிருக்கின்றனர். முதலாவது ஜில்லாபோர்டுகள் இந்த ரோடு பராமரிப்பு, மராமத்து, விஷயத்தில் கூலிகளைக் கண்டிராக்டர்கள் சுரண்டிக் கொள்ளையடிப்பதை நிறுத்த வேண்டும். கூலிகளைத் திட்டமிட்டு ஆங்காங்கு தொழிலாளிகள் அக்கூலிகளைப் பெறும்படி கவனிப்பு செலுத்த வேண்டும். அதுவேநேரிடையாக ஏழைகளுக்கு உதவி அளிக்கும் வழியாகும். ஒவ்வொரு ஜில்லா போர்டிலும் இதைக் கவனிக்க ஒரு கமிட்டி ஏற்படுத்த வேண்டும்.

மின்சார வசதிகள் நமது மாகாணத்தில் வளர்ந்துவருகின்றன. தற்சமயத்தில் மின்சார சப்ளை பல இடங்களில் பிரைவேட் கம்பெனிகளுக்கு லைசென்ஸ் மூலம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. லாபம் அதிகமாக வரும் இடங்களிலும், வழியிலும இதை அவர்கள் வளர்க்கின்றனர். ஜில்லாபோர்டுகள மின்சாரத்தை எல்லா கிராமங்களுக்கும் எடுத்துச் செல்வதுடன், அதை உபயோகப்படுத்திக் கொள்ள விவசாயிகளுக்கு வசதி அளிக்க வேண்டும்.

சுகாதார விஷயத்தில் நமது போர்டுகள் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு வைத்தியர் இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டும். குடிக்கும் ஜலம், வசிக்கும் வீடு, பழகும் இடங்கள் இவற்றை சுத்தமாக வைத்துக் கொள்ள விதிகள் ஏற்படுத்தி மக்களிடைப் பிரசாரம் செய்ய வேண்டும். தொத்து வியாதி கிளம்பிவிட்ட சமயங்களில் 'ஸ்பெஷல்' ஆட்கள் அனுப்பித்து 'பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு கிராமத்திலும் மக்களது ஓய்வு நேரத்தைக் கழிக்க ரேடியோ, வாசிப்பு சாலைகள் சிங்காரத் தோட்டங்கள் ஏற்படுத்த வேண்டும். நாட்டுப் புற மக்களுக்குத் தேகப் பயிற்சி அளித்து, ஒவ்வொரு ஊரிலும்

(14-ம் பக்கம் பார்க்க)


எமது மகத்தான தயாரிப்பின் உன்னத குணங்கள் !



ஒரு முறை பரீக்ஷித்தால் உண்மை விளங்கும்!!

பாரத் ஹேர் ஆயில்

(பாரத் கூந்தல் வளரும் தைலம்)

மயிர் உதிர்தல், மொட்டை, வழுக்கை முதலியவைகளை நீக்கி, மயிர் கால்களுக்கு உறுதியைக் கொடுத்து, கூந்தலை நீளமாகவும், அடர்த்தியாகவும் வளர்க்கிறது. தனது பரிமளமான வாசனையால் மனோ உற்சாகத்தையும் கொடுக்கிறது.

ஒருமாத உபயோகத்திற்கு போதுமான
பாட்டில் 1-க்கு 0-10-0

எல்லா ஊர்களிலும் ஏஜண்டுகள் தேவை.
விபரங்களுக்கு நேரில் எழுதவும்

தயாரிப்பவர்கள் :—

பாரத் ஷர்பத் & வாஸனை திரவிய உற்பத்தி சாலை

புதுக்கோட்டை

பொன்மலை ஸ்டாக்கிஸ்ட்:— P. சம்மந்தம் பிள்ளை
வெற்றிலை பாக்குக் கடை, ஆர்மரிகேட் எதிர்புறம் பொன்மலை.

N. B. சிலோன், பர்மா-மலேயா நாடுகளுக்கு முன்பணம் அல்லது பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் அனுப்ப வேண்டும்.

# சென்னையில் பொதுவேலை நிறுத்தம் ?

[கீழ் வரும் அறிக்கை, மதராஸ் பிரஸ் லேபர் யூனியனிலிருந்து நமது பத்திரிகைக்கு அனுப்பப்பட்டது. —ஆ - ர்.]

டையோசிசன் பிரஸ் மானேஜ்மேண்டார் தொழிலாளர் தலைவர்களை பழிவாங்கினர்

14-5-1938 ல், சென்னை டையோசிசன் பிரஸ் மானேஜ்மெண்டார், தங்கள் பிரவிஸில் 1-6-1938லிருந்து அமுலுக்கு வரும்படி ஓர் புதிய முறையை (சிஸ்டத்தை)க் கொண்டு வந்தனர். இந்த முறை, பீஸ் கூலியை பார்வைக்குமட்டும் கான்சல்பண்ணிவிட்டதாகக் காட்டி, புதுப் பெயரில் பழைய நிலைமையை அப்படியே சாஸ்வதமாக இருத்தி வருகிறது.

மதராஸ் பிரஸ் லேபர் யூனியனில் இந்த பிரவிஸிலுள்ள சகல தொழிலாளர்களையும் கொண்டுவந்து சேர்த்த பத்து தொழிலாளர் தலைவர்களை, 14-5-'38ல் மானேஜ்மெண்டார் பழிவாங்கினுர்கள். யூனியன், பழிவாங்கப்பட்ட 10 தொழிலாளர்களை மானேஜ்மெண்டார் திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ளவேண்டுமென்று எடுத்துக்கொண்ட முயற்சிகள் எல்லாம் மானேஜ்மெண்டார் பிடிவாதமாக இருக்கவே வீணுபின. தொழில் மந்திரி கனம் V. V. கிரி, டையோசிசன் பிரஸ் காரியதரிசி ஸ்ரீமான் W. H. வாரனை, பழிவாங்கப்பட்ட பத்து தொழிலாளர்களை திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று எடுத்துக்கொண்ட முயற்சிகளும் ஸ்ரீமான் வாரன் பிடிவாதத்தோடு இருந்ததால் பலனளிக்கவில்லை. 24 மணிநேர ஸ்டிரைக் நோட்டீஸ் மானேஜ்மெண்டாருக்கு மதராஸ் பிரஸ் லேபர் யூனியனிலிருந்து கொடுக்கப்பட்டது. அதன்படியே 25-6-38-ல் ஸ்டிரைக்கும் ஆரம்பமாயிற்று. கிளார்க்குகள் வேலை நிறுத்தம் செய்திருக்கும் தொழிலாளர்களுடன் சேர மறுத்ததால், தீவிரமாக மறியல் நடைபெற்றது. 5 பேர்கள், 10 பேர்கள் வீதமாக 35 தோழர்கள் கைதியாகி, இரண்டு வாரம் முதல் மூன்று வாரங்கள் வரை கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டனர்.

9-7-38-ல் சர்க்கார் ஓர் அறிக்கை விடுத்திருந்தனர். அதில், "அதிகாரிகள் பத்து தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கியது நியாயமா?" என்பதை விசாரணைக் கோர்ட்டு ஒன்றை நியமித்து தீர்ப்பளிப்பதாக கூறப்பட்டிருந்தது. அதே அறிக்கை, மதராஸ் பிரஸ் லேபர் யூனியனை மானேஜ்மெண்டார் அங்கீகரித்துக் கொள்வதாகவும் கூறியது. (இதற்குமுன் மானேஜ்மெண்டார் கம்யூனிஸ்டுகளால் யூனியன் நடத்தப்படுவதால், யூனியனை அங்கீகரிக்க மாட்டோம் என்ற பிடிவாதத்தோடு இருந்தனர்.)11-7-38ல் ஸ்டிரைக் நிறுத்தப்பட்டது.

3-8-38ல் தொழில் கமிஷனர் ஸ்ரீமான் S. V. ராமமூர்த்தி விசாரணைக் கோர்ட்டிற்கு நியமிக்கப்பட்டார். 2 மாதகாலம் விசாரணை நடந்தது. மானேஜ்மெண்டார் சார்பிலும், மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் சார்பிலும் சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர்.

8-10-'38-ல் சர்க்கார் கெசட்டில் "10 தொழிலாளர்களை நீக்கியது அநியாயம்" என்று கோர்ட்டாரின் தீர்ப்பு பிரசுரிக்கப்பட்டுள்ளது.

இதைக்கண்ட பின் ஸ்ரீமான் W. H. வாரன், ஓர் அறிக்கையை விடுத்தார். "ஆரம்பத்திலிருந்தே விசாரணைக்கு அர்த்தமில்லை. எஜமானனுக்கே தன் இஷ்டப்படி தொழிலாளர்களை வைக்கவும் எடுக்கவும் உரிமை உண்டே ஒழிய, பிறர் இதில் தலையிட்டு தீர்ப்புக் கூற உரிமை யில்லை என்றும், மானேஜ்மெண்டார் தங்கள் முடிவையே நிலைநாட்டுவார்களென்றும்" குறிப்பிட்டிருந்தார்.

13-10-'38 ல் சர்க்கார் ஸ்ரீமான் W. H. வாரனுக்கு புரியும்படி விஷயங்களை விளக்கிக் காட்டினர்:

"பணம் கொடுக்கும் எஜமானன்தான் தன் வேலைக்கு வேண்டிய தொழிலாளர்களை வைத்துக்கொள்ள முடிவான ஜட்ஜ என்பதுபற்றி விசாரணை நடக்கவில்லை. 14-5-'38ல் 10 தொழிலாளர்களை மானேஜ்மெண்டார் நீக்கியது நியாயமா எனபது பற்றியே விசாரிக்கப்பட்டு, விசாரணைக் கோர்ட்டார் கூறியிருக்கும் தீர்ப்பை மானேஜ்மெண்டார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று" குறிப்பிட்டிருந்தனர்.

14-10-'38 ல் இதற்கு பதில் ஒன்றை ஸ்ரீமான் W. H. வாரன் வெளியிட்டார்:

"சர்க்கார் முக்கிய விஷயத்தை மறுக்கிறது. ஏற்கனவே மானேஜ்மெண்டு கூறிய அபிப்பிராயத்தோடுதான் இன்றும் இருக்கிறது. இன்று இருக்கும் பர்மனென்டு ஸ்டாபே (Permanent Staff) கூடுதலாக இருப்பதால், இத்துடன் எந்த எண்ணிக்கையும் சேர்க்க மானேஜ்மெண்டு தேவைப்படவேயில்லை. யார்தான் இறுதியாக முடிவு கூறும் ஜட்ஜ்? மானேஜ்மெண்டா? கோர்ட்டா? மானேஜ்மெண்டுதான் என்றால், மானேஜ்மெண்டார் தவறு என்று கோர்ட் கூறுவதில் அர்த்தமில்லை. கோர்ட்டுதான் என்றால், சம்பளம் கொடுக்கும் மானேஜ்மெண்டு அபிப்பிராயத்தை மீறி வெளியே உள்ள அதிகாரி கூறும் தீர்ப்பை மானேஜ்மெண்டு ஏற்றுக்கொள்ள மறுக்கிறது."

சட்டத்தை மீறி நடக்கும் மானேஜ்மேண்டு.

நடுநிலைமையோடு கூடிய விசாரணைக் கோர்ட்டாரின் தீர்ப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று பல கடிதங்கள் மானேஜ்மெண்டாருக்கு, மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் எழுதிக் கேட்டுக்கொண்டது. ஆனால் மானேஜ்மெண்டார் எதையும் கவனிக்கவில்லை.

இதற்கிடையில், பல வாரங்கள் ஓவர்டைம் வேலை, பாக்டரி சட்டத்தை மீறியும் நடந்துகொண்டே வந்தது. இந்த டையோசிசன் பிரவிஸில் ஜனவரி மாதம் திடும்பிரவேசமாக பாக்டரி இன்ஸ்பெக்டர் இந்த பிரவிஸிற்கு வந்தபோது, குறிப்பிட்ட நேரத்திற்குமேல் ஓவர்டைம் வேலை நடந்துகொண்டிருப்பதைக் கண்டு, பாக்டரி சட்டத்தை மீறியதற்காக ஸ்ரீமான் W. H. வாரன்மீது கோர்ட்டில் வழக்குத் தொடுத்திருக்கிறது சர்க்கார். எனவே வேலை மந்தமென்ற பல்லவியை மானேஜ்மெண்டார் பாடி வந்ததின் குட்டு, பாக்டரி இன்ஸ்பெக்டர் கண்டுபிடித்த கேஸிலிருந்து வெளிப்பட்டுவிட்டது. பிறரை ஏமாற்றுவதற்கு இந்த மாதிரியான பொய்யை மானேஜ்மெண்டார் கூறி வந்திருக்கிறார்கள். இதோடு மானேஜ்மெண்டு விஷமம் நின்றுவிடவில்லை. 10-1-39 ல் புதிதாக 4 தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொண்டார்கள். மீண்டும் புதிதாக 4 தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொண்டார். ஏற்கனவே பழிவாங்கப்பட்டவர்கள் வேலையில்லாதிருக்கையில், புதிதாக 8 தொழிலாளர்களை மானேஜ்மெண்டார் வேலைக்கு எடுத்துக்கொண்டிருப்பதை ஆட்சேபித்து, யூனியனிலிருந்து ஸ்ரீமான் W. H. வாரனுக்கு கடிதம் அனுப்பப்பட்டது. ஆனால் வாரன் இந்த விஷயத்தைப்பற்றி தர்க்கிப்பதற்கு எந்த பதிலுடனும் இந்த சமயம் வெளியே வரவில்லை.

இரண்டாம்முறை டையோசிசன் பிரஸ் ஸ்டிரைக்.

கீழ்க்கண்ட கோரிக்கைகளைப் பெற டையோசிசன் பிரஸ் தொழிலாளர்கள் 31-1-'39 ல் மீண்டும் ஸ்டிரைக் செய்தனர்.

(1) விசாரணைக் கோர்ட்டின் தீர்ப்பின்படி மானேஜ்மெண்டார் நடக்கவேண்டும்.

(2) 1-6-'38 ல் வெளியிட்ட முறையை (System) தள்ளிவிட்டு, மாதாந்திர சம்பள முறையை கொண்டுவர வேண்டும்.

(3) 15-11-'38 ந் தேதி யூனியன் கடிதத்தில் தெரிவித்திருக்கும் குறைகளை போக்கவேண்டும்.

(4) ஸ்டிரைக்கில் கலந்துகொண்டதற்காகவும், அல்லது யூனியன் நடவடிக்கைகளில் கலந்துகொண்டதற்காகவும், எந்த தொழிலாளியையும் பழிவாங்கக்கூடாது.

(5) ஸ்டிரைக் காலத்திற்குச் சம்பளம்.

கதவடைப்பு

கிளார்க்குகள் உள்பட சகல தொழிலாளர்களும் வேலைக்குப் போகாது ஸ்டிரைக்கில் ஈடுபட்டிருப் (350 பேர்) பதைக் கண்ட மானேஜ்மெண்டார், 2-2-1939-ல், தேதி குறிப்பிடாமல் கதவடைப்பு செய்துள்ளனர்.

தடியடி தாண்டவம் !

கதவடைப்பிற்கு முன், ஒரு சில கிளார்க்குகள் பிரஸ் உள்ளே போக வந்துகொண்டிருந்தவர்களை, தொழிலாளர்கள் வேலைக்குப்போக வேண்டாமென்று கேட்டுக்கொண்ட

(13-ம் பக்கம் பார்க்க)

# ஜெர்மனி காலனிகளை விரும்புவதேன்?

மகாயுத்தத்தில் இழந்த காலனிகளைப் பெற வேண்டுமென்னும் ஜர்மனியின் கிளர்ச்சி சில மாதங்களில் முக்கியமெனக் கருதப்படும். ஆதலால், காலனி சம்பந்தமான விஷயங்களை ஏகாதிபத்ய எதிரிகளாகிய நாம் அறிந்து கொள்ளுதல் அவசியம்.

### காலனிக் கிளர்ச்சி

"காலனிகளை ஜர்மனியின் முக்யத்வத்திற்காக விரும்பவில்லை. ஜர்மனியின் பொருளாதார நிலைமையைச் சரிப்படுத்த எண்ணியே வேண்டுகிறேன்" என ஹிட்லர் "மெயின் காம்ப்" என்ற புத்தகத்தில் எழுதியிருக்கிறார். ஜர்மனி ஆதிக்கம் ஐரோப்பாவில் பரவ ஹிட்லர் முயற்சிசெய்வார். சோவியத் யூனியனைச் சேர்ந்த யூக்ரேன் பிரதேசத்தை ஜயித்து, தென் கிழக்கு ஐரோப்பாவில் தன் எல்லையை ஜர்மனி ஏற்படுத்தும். பிரிட்டனுடனும் இத்தாலியுடனும் உறவாடி, பிரான்ஸைத் தகர்த்தெறிய முற்படும். இச்சமயத்தில் காலனிகள் இருந்தால் அவைகளைக் காப்பாற்ற முடியாது. ஐரோப்பாவை அடக்கி விட்டால், பிரான்ஸைத் தகர்த்து விட்டால், சோவியத் யூனியனை ஒடுக்கி விட்டால்; ஜர்மானிய ஆதிக்கம் பரவ பிரிட்டனுடன் யுத்தம் செய்ய நேரிடும். அச்சமயம்தான் காலனிப் பிரச்சினை கிளம்பும்.

### "மெயின் காம்ப்" மார்க்கம்:

இதுவரை "மெயின் காம்ப்" வழியையே பின்பற்றிய ஹிட்லர், காலனிகள் விஷயத்தில் தவறிவிட்டார். காலனிகளிலும், ஜர்மனியிலும் ஒற்றர்கள் மூலமாகவும், பிரசங்கங்கள் மூலமாகவும் காலனிக் கிளர்ச்சி நடைபெறுகிறது. மேனாட்டு வல்லரசுகளின் கண்களில் மண்ணைத் தூவ ஆரம்பித்தது காலனிக் கிளர்ச்சி. மூனிச்சிற்குப் பின் காலனிக் கிளர்ச்சி வேறு வழியில் திரும்பியிருக்கிறது. சேம்பர்லேனின் பிரவேசத்தால், ஜர்மானிய ஆதிக்கம் ஐரோப்பாவில் வெகுதூரம் பரவியிருக்கிறது. டலாடியரின் துரோகத்தால் பிரான்ஸ் பலவீனமடைந்திருக்கிறது. சோவியத் ரஷ்யாவின் படைப் பலமும் ஐந்து வருடத் திட்டத்தின் வெற்றியும், யூக்ரேன் பிரதேசத்தை ஜெயிக்கும் ஹிட்லரின் எண்ணத்தை மாற்றியிருக்கிறது.

### காலனிகள் எதற்கு ?

ஜெர்மனியின் பொருளாதார நிலைமையைச் சரிப்படுத்தவும், அதிகமாகின்ற ஜனத் தொகை தங்க வசதிக்கும் காலனிகள் அவசியம் என ஹிட்லர் கூறுகிறார். இக்காரணங்களை ஆராய்கையில் ஹிட்லர் கூறுவது பெரிய மோசடியாக இருக்கிறது. ஜர்மனியின் பொருளாதார நெருக்கடி காலனிகள் இல்லாததால்தான் என்பது மிகவும் நம்பத்தகாத காரணம். காலனிகளில் முக்கியமான தாதுப் பொருள்கள் உண்டாவதில்லை. அமெரிக்கா, ரஷ்யா, ஐரோப்பா, போன்ற வல்லரசு நாடுகளில்தான் தாதுப் பொருள்கள் கிடைக்கின்றன. இரும்பு, நிலக்கரி, பெட்ரோல், செம்பு முதலியவை காலனிகளில் பெரும்பாலும் இல்லை. எண்ணெய் வித்துக்கள்தான் ஆப்ரிக்கா காலனிகளில் உண்டாகின்றன. பழைய ஜர்மனி காலனிகளில் தாதுப் பொருள்களே உண்டாகவில்லை. பாலைவனத்திற்கு அவைகளை ஒப்பிடலாம். அதிகப்படியான ஜனத்தொகை பிரச்னைக்காக காலனிகள் அவசியமா என்பதுபற்றி ஆராயலாம். 1913-ம் வருடம் காலனிகளில் இருந்த ஜர்மன் ஜனத்தொகை 20,000. தென்மேற்கு ஆப்ரிக்கா ஒரு பாலைவனப் பிரதேசம். உலகிலுள்ள அநேக காலனிகளைப் போன்று தங்கனிகா உஷ்ணப் பிரதேசத்தில் இருப்பதால் வெள்ளையர் தங்க வசதியில்லை.

### வீண் மிரட்டலா ?

ஹிட்லர் காலனிக் கிளர்ச்சி பின் எதற்காக? வீண் மிரட்டலும், ஜர்மானியர் ஹிட்லரிடம் கொண்ட மதிப்பை நிலை நிறுத்தலும்தான். ஹிட்லரின் நாடு பிடிக்கும் ஆசை எத்தகையது எனில், தெற்கு ஐரோப்பாவைக் கைப்பற்றி, இதாலியரின் உதவியால் ஆப்பிரிக்காவைக் கைப்பற்றினால், இந்தியாவிற்கும் பிரிட்டனுக்கும் உள்ள விமான கப்பல் மார்க்கங்களை அறுத்துவிட்டு, இந்தியாவுடன் போர் தொடுக்கலாம். ஜர்மனியர்களுக்குத் தன்னிடமுள்ள மதிப்பையும் நம்பிக்கையையும் நிலை நிறுத்த, மின்னல்போன்ற வெற்றிகளும், இழந்த காலனிகளைத் திரும்பிப் பெறுதலுமே என்பதை ஹிட்லர் நன்குணர்ந்திருக்கிறார்.

காலனிகளிலுள்ள மக்களின் சுதந்திரத்திற்கு சோஷியலிஸ்டுகள் போராடுகையில், ஹிட்லருக்கு காலனிகளைக் கொடுக்கக் கூடாதென்பதற்கு பல காரணங்கள் கூறவேண்டியிருக்கிறது. மகாயுத்தத்திற்கு முன் ஜெர்மானிய ஆட்சி மக்களை நரகக்குழியில் தள்ளி குற்றுயிராக வாழவிட்டனர். தென்மேற்கு ஆப்பிரிக்கா மக்கள், 1904-ம் வருடத்தில் ஏற்பட்ட கலகத்தில், பாலைவனத்திற்கு ஜெர்மானியரால் துரத்தப்பட்டு குடிக்க நீரின்றி இறந்தனர். இது பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் அக்ரமங்களைப் போன்றதே. நாஜிகளின் நிறவேற்றுமை கொள்கைகளும், உள்நாட்டு எதிர்ப்பின்மையும் ஜெர்மானிய ஆட்சியை கொடூரமாக்குமென்பதில் ஐயமில்லை.

—[ S. N. ]—

### காலனிப் பிரச்சினை

ஜெர்மனிக் காலனிக் கிளர்ச்சி கிளம்பியிருக்கும் இச்சமயத்தில் பிரிட்டனிலும், அதன் நாடுகளிலும் உள்ள சோஷியலிஸ்டுகள் செய்ய வேண்டியது என்ன? அடிமை நாடுகளின் ஆட்சி முறையை மக்களுக்கு உணர்த்தல் வேண்டும். பாட்டாளி மக்களின் இயக்கங்களை ஏகாதிபத்ய அரசியல் யுத்தம் ஆரம்பிக்கும் நோக்கத்துடன் செய்யும் சூழ்ச்சிகளை விளக்கி, சுதந்திரமக்களாயிருந்தால்தான் காலனிகள் பாஸிஸத்துடன் போராடலாமெனக்கூறி, நாட்டின் முற்போக்கு எண்ணமுடையவர்களின் கூட்டுறவால் யுத்தம் வருதலையும், பாஸிஸத்தையும் எதிர்த்து, குடியாட்சிக்கான வேண்டுதல்களை மக்களுக்கு உணர்த்தி, அரசாங்கத்தின் கண் முன்னில் கொணர்ந்து, காலனிகளின் பூரண சுதந்திரத்திற்காகப் போராடுதல்தான் சோஷியலிஸ்டுகள் செய்யவேண்டிய முக்கிய கடமை. காலனிகள் சுய ஆட்சி பெறும் கால அளவின் திட்டமும், வேறு நாடுகள் சேர்க்கப்படல் கூடாது என்ற திட்டமும் (சேர்ந்திருந்தால் திருப்பியளித்தும்), டிரேட் யூனியன்கள், வேலை நிறுத்தங்கள், இவைகளுக்கு உரிமைகள் அளித்தும், கட்டாய வேலையை ஒழித்தும், கல்வி, சுகாதார சம்பந்தமாக விவரித்த திட்டமும், ஆகிய இவைகள் அடங்கிய ஓர் ஏற்பாட்டை காலனிகளுக்கு ஏற்படுத்தல் வேண்டும். இந்த திட்டம் எல்லாக் காலனிகளுக்கும் பொதுவான திட்டமே ஒழிய, தனிப்பட்ட முறையில், ஒவ்வொரு காலனியின் நிலைமைகளுக்குத் தக்கவாறு திட்டங்கள் ஏற்படுத்தல் அவசியம். காலனிப் பிரச்சினைகளுக்கு, எல்லாக் காலனிகளையும் ஒரு சர்வதேச சங்க கௌன்ஸில் கீழ்வைக்கப்பட வேண்டும் அல்லது காலனிகளை சர்வ தேச கமிஷன்கள் கையில் ஒப்படைத்து ஐரோப்பிய தேசத்தவர்களிடை வித்தியாசம் ஏற்படாமல் ஆளவேண்டுமென பிரிட்டனில் சில 'தீவிரவாதிகள்' கூக்குரலிட்டனர். சர்வ தேச சங்கம் தற்போது இருக்கும் நடைப் பிணம் போன்ற நிலையில், கலகம் மூளாமல் எங்ஙனம் காலனிகளை கௌன்ஸில்கள் மூலம் ஆள முடியும்? சர்வ தேச கமிஷன்களைக் கொண்டு ஆள்வதென்பதும் முடியாத காரியம். பல அரசாங்கங்கள் ஒன்றுகூடி மக்களைச் சுரண்ட நேரிடும்.

(18-ம் பக்கம் பார்க்க)

பெருங்காயமே மேலானது
V.H.R
ASAFOETIDA
Extra Superior MISKY ASAFOETIDA
V.H.R
1lb Net When Packed
Sole Importers
Varjiwandas Hirjee & Co.
194, Govindappa Naick St.
G.T. MADRAS
VARJIWANDAS HIRJEE & Co.,
194. Govindappa Naick Street, G.T. MADRAS

ஜனசக்தி

சென்னை, 25—2—39.

# சோதனைக் காலம்

—:o:—

காங்கிரஸ் மகாசபையின் 53 வருஷ சரித்திரத்தில் என்று மேற்படாத நிலைமை இன்று ஏற்பட்டிருக்கிறது. காரியக் கமிட்டி சமாப்தி அடைந்து விட்டது. சுபாஷ் பாபு காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டதுதான் இதற்குக் காரணம்.

இந்தத் தேர்தலில் ஏற்பட்ட பிரச்சினைகளையும், வாத விவாதங்களையும் மீண்டும் இங்கு ஆலோசிக்க வேண்டிய அவசியமில்லை. சுபாஷின் வெற்றி, தீவிர வாதிகளின் வெற்றியல்ல வென்றும் தீவிரவாத, மிதவாதப் பிரச்னைக்கே இதில் இடமில்லை என்பதையும் முன்பே நாம் எடுத்துக் கூறியிருக்கின்றோம். தேர்தல் காலத்திலேயே, ஆசாரிய நரேந்திர தேவ், தோழர் ஜயப்பிரகாஷ் நாராயண் முதலியவர்கள் இதை நன்கு விளக்கிக் கூறினர்கள். தேர்தலுக்குப் பிறகும் காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சியும் கம்யூனிஸ்டுகளும் இதை மீண்டும் மீண்டும் வற்புறுத்தியிருக்கின்றனர். காங்கிரசின் ஒற்றுமையைக் குலைக்க வேண்டாமென்று அவர்களெல்லோரும் விடுத்த வேண்டுகோள்களெல்லாம், பயனற்றுவிட்டன.

இன்று, ஸர்தார் பட்டேல் முதலியவர்கள் கூறும் வாதம் ஏற்கப்படுமாயின், தேசீயப் போராட்டமே தடைப் பட்டுவிடும். "காங்கிரசிற்குள்ளேயே ஒன்றுக்கொன்று முரண்பட்ட, ஒன்று சேர முடியாத கோஷ்டிகளுக்குள்ளே ஏற்படும் சமரசத்தை ஆதாரமாகக் கொள்ளாமல், திட்டமான கொள்கையை தேசம் கடைப்பிடிக்கும் காலம் வந்துவிட்டது" என்று அவர்கள் கூறுகின்றனர். உலகத்திலேயே எந்த ஸ்தாபனத்திலுமில்லாத புதுமை இது. அதிலும் குறிப்பாக, நம்மனைவருக்கும் முக்கியமான பொது எதிரி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இருக்கும் போது, இந்தக் கொள்கை இன்னும் அதிகமான அபாயம் விளைவிக்கக்கூடியது.

காங்கிரசின் அடிப்படையான கொள்கையில் இன்று வித்தியாசமே கிடையாது. சமாதானமும், நியாயமுமான முறையில் இந்தியாவின் பூரண சுயராஜ்யத்தை அடைய வேண்டும் என்ற அடிப்படையான காங்கிரஸ் கொள்கையிலும், லட்சியத்திலும் உள்ள மனப்பூர்வமான நம்பிக்கைதான் இன்று காங்கிரசிற்குள்ளேயுள்ள பல்வேறு கோஷ்டிகளையும் ஒருங்கே இணைத்து நிற்பது. இந்த ஒற்றுமைமைதான் இதுவரையில் காங்கிரசின் மூல பலம். ஆகவே, அடிப்படையான கொள்கை சம்பந்தப்பட்ட வரையில், முரண்பாடு எந்த கோஷ்டிகளுக்குள்ளேயும் இன்று இல்லை என்பதை நாம் அழுத்தமாகக் கூற விரும்புகிறோம்.

இந்தக் கொள்கையை ஆதாரமாகக் கொண்டு லட்சியம் சீக்கிரம் கைகூடுவதற்காக, திட்டத்தைப் பொறுத்த வரையில் ஒரேவித அபிப்பிராயம் இருக்குமென்று எதிர் பார்க்க முடியாது. அது இயற்கைக்கே விரோதமானது. ஆகவே, திட்டத்தைத் தயாரிப்பதில் ஒவ்வொருவருடைய யோசனையும் ஸ்தாபனத்திற்குக் கிடைக்கவேண்டும். அந்த யோசனையைக் கொடுப்பது, ஒவ்வொரு காங்கிரஸ்காரனுடைய கடமையுமாகும். பலவிதப்பட்ட அபிப்பிராயங்களும் ஒன்றோடொன்று மோதி, அலசி, ஆராயப்பட்டு, கடைசியில் திட்டமாக நிர்ணயக்கப்படும் முடிவை, எல்லோரும் ஏற்றுக்கொண்டு வந்தால்தான், நாம் லட்சியத்தை நோக்கி முன்னேறிச் செல்வது சாத்தியமாகும். சட்டசபையில்கூட, தேசத்தின் நிலைமைக்குத் தக்கவாறு, எதிர்க் கட்சியின் யோசனையைக் கேட்டு, அதிகாரத்திலிருக்கும் கட்சி, தங்கள் திட்டங்களை மாற்றியமைத்துக் கொள்கையில், காங்கிரசைப் போன்ற ஸ்தாபனத்தில், ஒரே அபிப்பிராயம் என்பதை நாம் எப்படி நினைக்க முடியும்?

ஆனால், இன்று, கூறப்படும் வாதமோ, இதற்கு நேர் மாறாக இருக்கிறது. தேர்தலில் வெற்றிபெற்ற தலைவர் தேசத்தின் முன் வைக்கும் திட்டத்தில், ஒற்றுமை உள்ள அம்சங்களை நிறைவேற்றுவதில் மாத்திரம்தான் ராஜினமாச் செய்த தலைவர்கள், தலைவருக்குப் பரிபூரண ஒத்துழைப்பை அளிப்பார்களாம். மற்ற அம்சங்கள் சம்மந்தப்பட்ட வரையில் ஒத்துழையாமையே எதிர்பார்க்க வேண்டும். இதுதான் அவர்கள் கடிதத்தின் தாத்பரியம். கடந்த சட்டசபைத் தேர்தல் காலத்தில், இந்தக் கொள்கை காங்கிரசில் அநுஷ்டிக்கப்பட்டிருந்தால், இன்று காங்கிரஸின் நிலைமை தேசத்தில் எப்படியிருக்கும் என்பதை யோசித்துப் பார்த்தாலே, இந்தக் கொள்கை எவ்வளவு மோசமானது என்பது விளங்கும். இந்தக் கொள்கை ஏற்கப்படுமாயின், காங்கிரஸ் போடும் எந்தத் திட்டமும் வெற்றிகரமாக நிறைவேற்றி வைக்கப்படமாட்டாது.

ஒத்துழையாமை என்பது, காங்கிரஸ் சம்பந்தப்பட்ட வரையில் நாம் கனவிலும் நினைக்க முடியாத விஷயமாகும். பிரிட்டிஷ் சர்க்காரிடம் அநுஷ்டிக்க வேண்டிய கொள்கை ஒத்துழையாமையாகும். சென்ற காலத்தில் பிரிட்டிஷ் சர்க்காருக்கு விரோதமாக செய்த ஒத்துழையாமையை இன்று அதே தலைவர்கள் இன்று காங்கிரசிடம் அநுஷ்டிப்பதாகக் கூறுகின்றனர். இதனல் தேசத்திற்கு எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய விளைவுகள் கடுமையானவை என்பதை எடுத்துக் கூறவும் வேண்டுமா?

காங்கிரஸ் ஸ்தாபனம், ஒரு சட்டசபையல்ல. அது போராட்ட ஸ்தாபனமாகும். ஆகவே, அதிகாரக் கட்சி, மந்திரி சபை முதலிய வாசகங்களுக்கு காங்கிரஸில் இடமே கிடையாது. காங்கிரஸ் ஜனநாயக முறையில்செய்யும் ஒவ்வொரு முடிவும், இராணுவத்தில் அநுஷ்டிக்கப்படும் கட்டுப்பாடுடனும், ஒழுங்குடனும், ஒவ்வொரு காங்கிரஸ் ஊழியனையும் கட்டுப்படுத்தும். அவர்கள், அந்த முடிவை நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஆனல், இன்று, திட்டத்தைப் பொறுத்த வரையில் கூட காங்கிரஸில் அபிப்பிராய பேதம் இல்லையே. பார்லிமெண்டரி திட்டம் சம்பந்தப்பட்ட வரையில், தேர்தல் விஞ்ஞாபனத்தில் ஒரு எழுத்தைக் கூட மாற்ற வேண்டுமென்று யாரும் கூறவில்லை. சமஸ்தான மக்கள் போராட்டங்களைப் பற்றியும், இன்றைக்கு ஒருவிதப்பட்ட அபிப்பிராயம் ஏற்பட்டு வருகிறது. அப்படியிருக்கையில் இந்த ஒத்துழையாமைக்கு சிறிதேனும் இடம் கிடையாது என்பதை மீண்டும் வற்புறுத்துகிறோம்.

நீண்ட காலமாகப் பெருகி வளர்ந்து வந்திருக்கிற காங்கிரசின் செல்வாக்கிற்கும் சக்திக்கும் சோதனைக் காலம் வந்திருக்கிறது. ஜனநாயகத்திற்கு சோதனைக் காலம். ஏகாதிபத்தியத்தை முறியடிக்கும் காலம் நெருங்கிவிட்டது. காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மீதுள்ள நமது பற்றிற்கு சோதனைக்காலம் இது. இவ்விஷயங்களையெல்லாம் கண்முன்னே இறுத்தி, திரிபுரியில் கூடும் பிரதிநிதிகள் பிரச்சினைகளை ஆராய்வார்களாயின், இன்றைக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி, சூரியனைக் கண்ட பனிபோன்று மறைந்து காங்கிரஸில் நம் ஒற்றுமை பலம் இன்னும் பதின்மடங்கு அதிகரித்து, பிரிட்டிஷ் சர்க்காரை வீழ்த்தவல்ல மாபெரும் சக்தியாய் நாம் மாறிவிடுவோம். இந்தச் சோதனையில் நாம் வெற்றி பெறுவோமாக.

**காங்கிரஸ் நீடூழி வாழ்க!**

# —: குறிப்புகள் :—

## பரோடா சீர்திருத்தம்

பரோடா சமஸ்தான மக்களுக்கு ஏதோ "சீர்திருத்தங்கள்" கொடுத்திருக்கிறார்கள். தாரா சபை என்ற ஓர் சட்ட சபை ஏற்படுமாம். ஆனால், இந்த சட்ட சபையின் பொறுப்போ பூஜ்யம். ஒரு மந்திரி நியமிக்கப்படுவாராம். அவர் இந்த சட்ட சபையின் அங்கத்தினராகக் கூட இருக்க வேண்டியதில்லை. சட்டசபைக்கு அவரை நீக்குவதற்குக்கூட உரிமை கிடையாது. இரண்டு பார்லிமெண்டரி காரியதரிசிகள் இருக்கப் போகின்றனராம். அவர்களுக்கு என்ன வேலையோ நமக்குத் தெரியவில்லை. சட்டசபைக்கு ஒரு உப-தலைவர், சட்ட சபை அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப் படுவார் சட்டசபையின் நிரந்தரத் தலைவர், திவான். இந்த உப-தலைவருக்கும் என்ன பொறுப்பு இருக்கப் போகிறது?

இந்தச் சீர்திருத்தத்தினால் மக்களுக்கு என்ன பயன்? ஏதோ நான்கு குலாம்களுக்கு உத்தியோகம் கிடைக்கும்.

இந்தமாதிரி மரப்பாச்சிகளைக் கொடுத்து விட்டு, சமஸ்தான மக்களை ஏமாற்றிவிடும் காலம் மலையேறி விட்டது. இன்றைக்கு தேசம் பூராவுமுள்ள சமஸ்தான மக்களின் ஜனநாயக உணர்ச்சி, பரோடா மக்களை மாத்திரம் பாதிக்காமலிருக்கப் போவதில்லை. பரோடா மக்களும், சமஸ்தான மக்களின் சுதந்திரப் போராட்டத்தின் முன்னணியில் நிற்பார்களென்பதில் ஐயமில்லை.

## சூளை மில்லில் வேலை நிறுத்தம்

மீண்டும் சூளை மில்லில் வேலை நிறுத்தம் ஆரம்பமாய்விட்டது. 3000 தொழிலாளர்கள் வரையில் போராட்டத்தில் இறங்கி யிருக்கின்றனர். அவர்களுடைய கோரிக்கையோ மிகமிக நியாயமாயிருக்கின்றன. விசாரணைக் கோர்ட்டு, அவர்களுக்குச் சிபார்சு செய்த சௌகரியங்கள் வேண்டுமென்று கேட்கின்றனர். 10, 15 வருஷங்களுக்கு மேலாகவே 'டெம்பரவரி' என்ற பெயரிட்டு வைத்துக்கொண்டிருக்கும் தொழிலாளிகளை 'பர்மனண்டாக' வைக்க வேண்டுமென்கின்றனர். இவைகளையும் மறுத்துக்கொண்டிருக்கிறது மில்லின் நிர்வாகம். தொழில் மந்திரி கனம் கிரி, வேலை நிறுத்தத்திற்கு முன்பு தலையிட்டும்கூட நன்மை ஒன்றும் ஏற்படவில்லை. இப்படிப் பட்ட நிலைமையில், வேலை நிறுத்தத்தைத் தவிர வேறு என்ன வழி யிருக்கிறது தொழிலாளிகளுக்கு ?

இன்று தினம், சென்னை மாகாணம் பூராவுமுள்ள முதலாளிகள் தொழிலாளிகள் மீது ஆக்கிரமிப்பை ஆரம்பித்திருக்கின்றனர். டையோசிசன் பிரசிஸின் முதலாளி, சர்க்காரால் ஏற்படுத்திய கோர்ட்டின் தீர்ப்பை நிராகரித்துவிட்டார். சித்திவலசா மில் முதலாளியும் சர்க்காரின் சிபார்சுகளை நிராகரித்திருக்கிறார் என்பதை ஞாபகப் படுத்த விரும்புகிறோம். கோயம்புத்தூரில் சட்டப்படி முதலாளிகளைக் கட்டுப்படுத்தக் கூடிய கோர்ட்டின், தீர்ப்பை சில முதலாளிகள் ஏற்க மறுத்ததன் விளைவாக, சென்ற மாதத்தில் வேலை நிறுத்தம் ஏற்பட்டது என்று சர்க்காரே ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்.

இப்படிப்பட்ட நிலையில் நமது பிரதம மந்திரி, சட்டசபையில் பட்ஜெட்டைப் பிரரேபிக்கையில், முதலாளிகளைப் புகழ்ந்து, தொழிலாளிகளைக் கண்டித்துப் பேசுவதுதான் விந்தையிலும் விந்தை. சர்க்கார் ஏதோ சட்டம் கொண்டு வரப்போவதாகக் கூறிவந்த காலமும் போய்விட்டது. சென்னை சர்க்கார், சட்டத்திற்கே அவசியமில்லை என்று கருதுவதாகவே, ராஜாஜியின் பிரசங்கம் தொனிக்கிறது.

இந்த நிலைமையை தொழிலாளிகள் வெகு காலம் பொருத்துக் கொண்டிருக்க முடியாது. இதனால் கடுமையான விளைவுகள் ஏற்படுமென்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

## நல்ல யோசனையே!

சர்க்கார் பாக்டரி இன்ஸ்பெக்டர்களுக்கு உதவியாக, கௌரவ பாக்டரி இன்ஸ்பெக்டர்களை நியமிப்பது சம்பந்தமாக, சர்க்கார் யோசித்து வருகின்றனர். எங்கெங்கு முடியுமோ அந்த அந்த இடத்தில் எம். எல்.ஏ. க்களும் எம். எல். ஸிக்களும் தேர்ந்தெடுக்கப்படலா மென்று யோசனை கூறப்பட்டுள்ளது. பாக்டரி ஆக்டை பிரதி தினமும் மீறிக்கொண்டே வரும் பல முதலாளிகள் கொழுப்பு இனி அடங்கிவிடும். ஆனால் ஒரு விஷயம்--தொழிலாளர் சட்டம் "இதோ வருகிறது" "அதோ வருகிறது" என்பதைப் போன்று, கௌரவ பாக்டரி இன்ஸ்பெக்டர்களை நியமிக்கும் யோசனை நடை முறையில் வர எத்தனை மாதங்களாகுமோ!

அதோடு, முதலாளி கங்காணிகளை, இந்த கௌரவ பாக்டரி இன்ஸ்பெக்டர் ஸ்தானங்களுக்கு பொறுக்கி எடுக்காதிருக்க வேண்டு மென்பதை, சர்க்காருக்கு ஞாபக மூட்டுகிறோம். 20 வருஷங்கள் தொழிலாளர் தலைவராக இருந்து அனுபவம் வாய்தவர் என்று சொல்லப்படும் நமது தொழில் மந்திரி ஸ்ரீ. வி. வி. கிரி, தகுதியான நபர்களை கௌரவ பாக்டரி இன்ஸ்பெக்டர் ஸ்தானங்களில் விரைவில் நியப்பாரென்றே நம்புகிறோம்.

* * *

கடனில் முங்கி மூழ்கி இருக்கும் தொழிலாளர்களுக்கு, ஏதோ சிறிது உபகாரம் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன், சர்க்கார், தொழிலாளர் கடன் நிவாரண மசோதா ஒன்று கொண்டு வருவார்களென்ற ஓர் செய்தி பத்திரிகையில் வெளி வந்துளது.

இன்று தொழிலாளர்களுக்கு கடன் கொடுப்பவர்கள் வாங்கும் வட்டி அநியாயத்தைக் கேட்டாலே, எவரும் திடுக்கிட்டுப் போய்விடுவார்கள். ஒரு ரூபாயுக்கு மாதம் 4 அணா வரைகூட வட்டி வாங்கும் பேர்வழிகள் அநேகர் உளர். தொழிலாளர்களுக்கு வட்டிக்குப் பணம் கொடுப்போர், முதலில் வட்டியை எடுத்துக் கொண்டே மீதி பணம் கொடுத்து வருகிறார்கள். மாதா மாதம் தொழிலாளர்கள் சம்பள தேதிகளில், தொழிற்சாலைகளுக்கு நேரே நின்று கொண்டு, தொழிலாளர்கள் வாங்கிக் கொண்டுவரும் சொற்ப சம்பளங்களையும் கைப்பற்றிக் கொண்டு வருகிறார்கள் லேவாதேவிக்காரர்கள். வாரா வாரம் தொழிலாளர்களுக்கு முதலாளிகள் சம்பளம் கொடுக்கும்படி கடன் நிவாரண மசோதாவில் சர்க்கார் ஏற்பாடு செய்துவிட்டால், தொழிலாளர்கள் கடன் வாங்கும் நிலைமை ஓர் அளவிற்குக் குறையும். மேலும், லேவாதேவிக்காரர்களிடம் இன்று தொழிலாளர்கள் பட்டிருக்கும் கடன்களை எல்லாம் சர்க்கார் தள்ளுபடி செய்துவிட வேண்டும். ஏனெனில், லேவாதேவிக்காரர்கள் தொழிலாளர்களிடம் கொடுக்கும் கடன் தொகையை விட பல மடங்கு அதிகமான தொகையை அவர்களிடம் வசூலித்து வந்துகொண்டிருப்பதை, சிறிது விசாரித்துப் பார்த்தாலே தெரிந்து கொள்ளலாம். விவசாய கடன் நிவாரண சட்டத்தில் கண்டிருப்பதுபோல், கடன் வாங்கின தொகையைப்போல் இரண்டு மடங்கு கடன் பட்டவர் கொடுத்திருந்தால், கடனே தள்ளுபடி என்றிருப்பதைப்போன்ற ஷரத்து, தொழிலாளர் கடன்நிவாரண மசோதாவில் இருந்தாலும், லேவாதேவிக்காரர்களிடம் சரிவர கணக்குகள் இல்லாதிருப்பதால், தொழிலாளர்களுக்கு இந்த ஷரத்தால் நன்மை விளையாது. ஆனபடியால்தான், லேவாதேவிக்காரர்களிடம் தொழிலாளர்கள் பட்டிருக்கும் கடன்களையே தள்ளுபடி செய்ய மேற்படி மசோதாவில் ஷரத்து இருக்க வேண்டும். அதோடு லேவாதேவிக்காரர்கள், சர்க்காரிடமிருந்து லைசென்ஸ் பெற்றுத்தான் தொழிலை நடத்த வேண்டுமென்றும், 100க்கு ½ ரூபாயுக்கு மேல் வட்டி வாங்கக் கூடாதென்று சர்க்கார் நிர்ணயித்துவிட வேண்டும். இந்தப்படி செய்தால், தொழிலாளர்களுக்கு பெரிய உதவியாய் இருக்கும். லைசென்ஸ் பெறாது தொழில் நடத்துவோரை கைது செய்து ஜெயிலில் போட வேண்டும்.

சர்க்கார் நிர்ணயிக்கும் தொகைக்குமேல் வட்டி வாங்கும் லைசென்ஸ் பெற்ற லேவாதேவிக்காரர்களை தண்டிக்க, தக்க ஏற்பாடும் செய்யப்பட வேண்டும் என்பதை சர்க்காருக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# சோஷியலிஸ்டுகள் கடமை

—[ கே. முருகேசன் ]—

தோழர் லெனின் மாணத்திற்குப் பின் சென்ற 15 வருடங்களில், சோவியத் யூனியனில் லெனின் புஸ்தகங்கள் 3170 பிரசுரிக்கப்பட்டு 72 பாஷைகளில் வெளி வந்திருக்கின்றன. 10 கோடியே 80 லட்சம் காப்பிகள் செலவழிந்திருக்கின்றன.

* * *

இந்தியாவில் 1927-ல் நடந்த மீரத் சதி வழக்கிற்கு முன், லெனின் புஸ்தகங்கள் நூற்றுக்கணக்கில் விற்பனையாகி இருப்பதாகத் தெரிகிறது. மீரத் சதி வழக்கிற்குப்பின், 1934-ம் வருஷம் இந்திய கம்யூனிஸ்டுக் கட்சியை சர்க்கார் சட்ட விரோதமான கட்சி என்று தடை விதித்த பின், 1934-ம் வருஷம், சட்டமறுப்புப் போராட்டங்களில் தடியடிபட்டு சிறை சென்ற தீவிர வாலிபர்கள் விடுதலையாகி வந்த பின், அவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட காங்கிரஸ் சோஷியலிஸ்டுக் கட்சிக்குப்பின், சோஷியலிஸ்டுப் பிரசாரம் ஒழுங்காக இந்தியா வெங்கும் நடைபெற்றுவர ஆரம்பித்தது. தீவிர தொழிலாள தலைவர்கள், கிருஷிகர் தலைவர்கள் ஒவ்வொரு மாகாணத்திலும் முடிந்த அளவிற்கு சோஷியலிஸ்டுப் பிரசாரம் செய்துவர ஆரம்பித்ததின் காரணமாகவும், வர்க்க ஸ்தாபனங்களை அதாவது சங்கங்களை நிறுவி, தொழிலாளர் கிருஷிகர் குறைகளைப் போக்கிக் கொள்ள பிரதி தினமும் போராட்டங்களை ஆங்காங்கே நடத்தி வருவதாலும், மாணவர்களும் அவர்கள் சங்கங்களை ஏற்படுத்திக் கொண்டு, சோஷியலிஸத்தின் அவசியத்தை உணர்ந்து வருவதாலும், இன்று சோஷியலிஸ்டுப் புஸ்தகங்கள் (மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின், ஸ்டாலின், டிமிட்ராவ் முதலியோருடைய புஸ்தகங்கள்) ஆயிரக்கணக்கில் இந்தியாவில் விற்பனையாகி வருகிறது. இருந்தபோதிலும் குறிப்பிடத் தகுந்த அளவிற்கு சோஷியலிஸ்டு புஸ்தகங்கள் மக்களிடையில் பரவவில்லை. சோஷியலிஸ்டு புஸ்தகங்கள் மலிவான விலைக்குக் கிடைக்க இன்று பல மாகாணங்களில் பல பாஷைகளில் சிறிய சிறிய பிரசுரங்கள் வெளியாகி வருகின்றன.

* * *

நமது மாகாணத்தை மட்டும் எடுத்துக்கொண்டு பார்த்தால், ஆந்திராவிலும், மலபாரிலும், அலுப்பு சலுப்பு, களைப்பு என்பதை இன்னதென்று அறியாத கள்ளங்கபடமற்ற உள்ளங்களைக்கொண்ட இளம் சோஷியலிஸ்டு வாலிபர்கள், இராப்பகலாக, ஓய்வு ஒழிவின்றி சோஷியலிஸ்டுக்கட்சிக் கொள்கைகளை தொழிலாளர் கிருஷிகர், மாணவர் சங்கங்களை ஸ்தாபித்து பிரசாரம் செய்து வருகின்றனர். அதோடு ஆந்திரா முழுதும், பெஜவாடாவிலிருந்து வெளி வரும் 'நவசக்தி' என்ற சோஷியலிஸ்டுக் கட்சி தெலுங்கு பத்திரிகையை பரப்பி வருகிறார்கள். அது போலவே மலபார் முழுதும், கள்ளிக்கோட்டையிலிருந்து வெளிவரும் 'பிரபாதம்' என்ற சோஷியலிஸ்டுக் கட்சியின் மலையாளி பத்திரிகையை பரப்பி வருகின்றனர். சோஷியலிஸ்டு புஸ்தகங்கள் அந்தந்த பாஷையில் அச்சடித்து, ஆயிரக் கணக்கில் காப்பிகள் விற்று வருகிறார்கள். காங்கிரஸ் பிரச்சாரத்தையும் ஒழுங்காகவும், முறையாகவும், தீவிரமாகவும் நடத்தி வருகிறார்கள்.

* * *

இந்தத் தோழர்களை, காந்திய வாதிகள் சந்தேகப் பார்வையுடன் பார்த்துக் கொண்டு வருவதோடு நில்லாது, இந்தத் தோழர்களுக்கு பல இடையூறுகளையும் செய்து வருவதோடு 'திருப்தி' அடையாமல், பிற்காலத்தில் அதாவது வரப்போகும் சுதந்திரப் போராட்டத்தின் முன்னணியில் நின்று தொழிலாளர்கள், கிருஷிகர்கள், மாணவர்கள் கூட்டத்திற்கு தளகர்த்தர்களாக விளங்கி போராடப்போகும் இந்த தோழர்களுக்கு எதிராக, தெரிந்தோ, தெரியாமலோ அறிந்தோ, அறியாமலோ விஷமப் பிரசாரம்கூட செய்து வருகிறார்கள். ஒரு சிறிது நேரம் தேச விடுதலையின் அவசியத்தை இப்பொழுதுள்ள தலைவர்கள் உணர்வார்களானால், சோஷியலிஸ்டு தோழர்களுக்கு எந்த தடையையும் அநாவசியமாக விதிக்கமாட்டார்களென்றே நம்ப இடமிருக்கிறது.

* * *

நமது தமிழ்நாட்டை எடுத்துக் கொண்டால், இங்கும் கா. சோஷியலிஸ்டுக் கட்சி, சுமார் 2 வருஷங்களுக்கு மேல் சொற்ப தோழர்களின் சலியாத உழைப்பால், மெச்சத் தகுந்த அளவிற்கு வேலை செய்திருக்கிறதை கண்ணுள்ள எவரும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது.

* * *

கட்சிப்பத்திரிகை "ஜன சக்தி" சென்னையிலிருந்து வெளி வருகிறது. ஜில்லாக்களிலுள்ள சோஷியலிஸ்டுக் கட்சித் தோழர்கள் தொழிலாளர்களிடையிலும், கிருஷிகர்களிடையிலும், மாணவர்களிடையிலும், பொது மக்களிடையிலும் பத்திரிகையைப் பரப்ப போதிய சிரமமெடுத்துக் கொள்ளாதிருக்கிறார்கள். சில ஜில்லாக்களில் மட்டும் நமது கட்சித் தோழர்கள், நமது கட்சி வேலைகளையும், தொழிலாளர்கள் சங்கங்களை ஒழுங்காகவும், திறமையாகவும் நடத்தி வருவதோடு, அவ்வப்போது ஏற்படும் தொழிலாளர்கள் போராட்டங்களையும் முறையாக நடத்தி வெற்றி பெற்று வருகிறார்கள். தொழிலாளர்களிடையேயும், பொதுமக்களிடத்திலும், கிருஷிகர்களிடத்திலும் காங்கிரசிலும் நல்ல செல்வாக்கு நமதுகட்சிக்கு இருப்பதே நம் கட்சி வளர்ந்து வருவதற்கு பேருதவியாய் இருக்கிறது. இருந்தபோதிலும் ஆந்திரா, மலையாளம் போன்று, நமது தமிழ் நாட்டில் சோஷியலிஸ்டுக் கட்சியிலுள்ள பெரும்பாலோர் கட்சி வேலைகளை சரிவர செய்து வரவில்லை என்பதை நாம் வருத்தத்தோடு கூற வேண்டியிருக்கிறது. சோஷியலிஸ்டு பிரசுரங்கள் 5 வெளிவந்து மூன்றுமாதங்களுக்கு மேல் ஆகியுங்கூட, நமது தோழர்கள் சரிவர சிரத்தை எடுத்துக் கொண்டு, கட்சிப் பிரசுரங்களை மக்களிடையே சரிவர பரப்ப முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை என்று தெரிகிறது. சுமார் 50,000 தொழிலாளர்கள், 200,000 கிருஷிகர்களிடையில் பிரச்சாரம் செய்து வரும் தமிழ் நாட்டு சோஷியலிஸ்டுகள், கட்சிப் பத்திரிகையையும் பிரசுரங்களையும் சரிவர பரப்ப முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். கீழ்க்கண்ட வேலைகளை கட்சித் தோழர்கள் ஒவ்வொருவரும் செய்கிறார்களா என்று பார்க்க வேண்டும்.

* * *

(1) நமது கட்சி மெம்பர்கள் ஒவ்வொருவரும் "ஜனசக்தி"க்கு 5 சந்தாதாரர்களைச் சேர்க்க வேண்டும். ஒவ்வொரு வாரமும் 10 ஜன சக்தி பத்திரிகைகளை விற்கவேண்டும். "நியூ ஏஜ்" "காங்கிரஸ் சோஷியலிஸ்டு" "நாஷனல் பிரண்ட்" ஆகிய மூன்று ஆங்கில பத்திரிகைகளுக்கும் மூன்று சந்தாக்களை சேர்க்க வேண்டும். அந்தந்த ஊர்களில் விற்பனை செய்ய தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

(2) ஜில்லா கட்சிகள் வாரா வாரம் அல்லது மாதம் ஒரு முறையாவது கூடி, மாதா மாதம் செய்ய வேண்டிய ஜில்லா வேலைகளை திட்டம் வகுத்து, முறையாக செய்து வரவேண்டும். கட்சிப் பொதுக் கூட்டங்களை நடத்தவேண்டும். தொழிலாளர் சங்கங்கள் நிறுவப்பட்டிருந்தால், ஒழுங்காக வாராந்திர பொதுக் கூட்டங்கள்-வகுப்புகள் நடத்துதல், ஊர்வலங்கள் நடத்துதல் முதலியன. சங்கங்கள் இல்லாத விடங்களில் உடனே சங்கங்களை ஏற்படுத்துதல், சங்க காரியங்களை முறையே கவனித்து வருதல், இதைப் போன்றே கிருஷிகர்கள் சங்கங்களில் வேலை செய்தல். மாணவர்கள் சங்கங்களையும் முக்கியமான விடங்களில் நிறுவி, அரசியல் உணர்ச்சியை அவர்களுக்குப் போதிப்பது. நல்ல லைப்ரெரிகளை ஏற்படுத்துவது. தொழிலாளர், கிருஷிகர்களிடையே அவர்களை வேலை செய்யப் பழக்குதல்.

காங்கிரஸ் கமிட்டிகளிலுள்ளோர், காங்கிரஸ் பிரச்சாரத்தை தீவிரமாக வாராந்திர கூட்டங்கள், ஊர்வலங்கள், வெளியீடுகள் மூலமாக நடத்தி வருதல்.

வாரா வாரமோ, மாதமொரு முறையோ, கட்சித் தலைமை ஆபீஸுக்கு ஒவ்வொரு கட்சி தோழர்கள் செய்த வேலைகளை தவறாமல் தெரிவிக்க வேண்டும் கட்சிக் காரியதரிசிகள்.

காங்கிரஸ் தொண்டர்படை ஒன்றையும், செந் தொண்டர் படை (Red Volunteers Corps) ஒன்றையும் உடனே அந்தந்த ஜில்லாக்களில் ஏற்படுத்தி, பயிற்சியளித்து வரவேண்டும்.

சமஷ்டி எதிர்ப்பு ஊர்வலங்கள் 15 நாட்களுக்கு ஒரு

(18-ம் பக்கம் பார்க்க)

3 கடியாரங்களும் 5025 இதர சாமான்களும் ரூ. 1-8 தான்
ஆட்டோ ரோஸ் சென்ட் 16 விலை ரூ. 1-8க்கு வாங்கினால் கீழ்க்கண்ட 895 சாமான்கள் இனும் பாக்கெட் வாட்ச்2, கோல்ட் கிலிட் ரிஸ்ட்வாட்சு 2, 'கில்லெட்'ஸேப்டி ரேஸர்1, ஷேவிங் பிரஷ்1, பவுடர் பாக்கெட்1, 14காரட் நிப்பு பவுண்டன் பேனா1, கிலிட் மோதிரம் 1, 1900 அடி பரவும் பாட்டரி விளக்கு 1, ஜெர்மன் 'பீ' டைம்பீஸ் 12வருஷ உத்திரவாதம் இன்னும் பல சாமான்களுடன் மொத்தம் 1025. தபால்செலவு அணா12 தனி. சிலோன் வாசிகள் முன்பணம் அனுப்பவும்.
ORIENTAL FANCY STORES, (Sec 102) P.B. 12204, Calcutta.

# காக்கினாடா துறைமுகத் தொழிலாளர் ஸ்ட்ரைக்

## போராட்டம் வெற்றியடைந்தது

சி.பி. இளங்கோ

காக்கினாடா சென்னை ராஜதானியின் கிழக்கரை ஓரமாக அமைந்திருக்கும் ஒரு துறைமுகப் பட்டணம். இங்கு 53700 மக்கள் வசிக்கிறார்கள். இங்கிருந்து அரிசி, நிலக்கடலை, சர்க்கரை, பஞ்சு, முதலியவைகள் வெளி ஊர்களுக்கு ஏற்றுமதியாகியும் இறக்குமதியாகியும் வருகின்றன. 1868-ம் வருடத்திலிருந்து இங்கு பல கம்பெனிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆயினும் அவைகளில் முக்கியமானது நூற்றுக்கணக்கான தொழிலாளர்களைக் கொண்ட ஸ்டிவடோர் கம்பெனி. தொழிலாளர்கள், ஸ்டீமர்களில் சாமான்களை ஏற்றுவதும் இறக்குவதும் தான் அவர்களது முக்ய வேலை.

### தொழிலாளர்களின் கேவல நிலைமை

ஆரம்ப காலத்திலிருந்தே ஸ்டிவடோர் கம்பெனி தொழிலாளர்களை அநியாயமாகச் சுரண்டி வருகின்றது. மேலும், பகலில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு தினம் 9 அணா கூலியும், இரவில் வேலை செய்கிறவர்களுக்கு 12 அணா கூலியும்கொடுத்து வருகிறார்கள். தொழிலாளர்கள் குளிர் காலத்திலும், கடல் கொந்தளிக்கும் சமயத்திலும் நிர்ப்பந்தப்படுத்தி வேலை வாங்கப்பட்டு வருகின்றனர். இவர்களுக்கு நல்ல உணவுகூட கம்பெனியார் அளிப்பதில்லை. இவைகள் எல்லாம் போதாதென்று அங்கேயிருக்கும் சில சில்லரை உத்யோகஸ்தர்கள் தொழிலாளர்களிடமிருந்து பணம் பிடுங்கி வருகின்றனர். முதலாளிகள் நினைத்த சமயம் தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கி விடுகின்றனர். ஏராளமான தொழிலாளர்கள் வேலையில்லாது தவிக்கின்றனர்.

### சங்க ஆரம்பம்

1938-வது வருடம் அக்டோபர் மாதம் 26-ந் தேதி காக்கினாடா துறைமுகத் தொழிலாளர் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. சங்கம் 800 அங்கத்தினர்களைக் கொண்டதாய் இருந்தது. யூனியன், தொழிலாளர்களின் குறைகளை நிவர்த்தி செய்ய வேண்டுமென்று கம்பெனியை பலமுறை வற்புறுத்திக் கேட்டுக் கொண்டதற்கு பதில், ஏராளமான தொழிலாளர்களை வேலையிலிருந்து முதலாளிகள் வெளியேற்றினர். இந்த நிலையைப் பொறுக்க முடியாமல் போகவே, 2000 தொழிலாளர்கள் ஜனவரி 30-1-39-ல் வேலை நிறுத்தம் செய்தனர்.

### தொழிலாளர் ஒற்றுமை

வேலை நிறுத்தத்தை உடைக்க விசாகப்பட்டணம் பீமலிப்பட்டணம் முதலிய இடங்களிலிருந்து கருங்காலிகளைக் கொண்டுவர முதலாளிகள் செய்த முயற்சியை, தொழிலாளர்கள் ஒருமுகப்பட்டு எதிர்த்தனர். விசாகப்பட்டணம் தொழிலாளர்கள் தங்கள் தோழர்களுக்கு பக்க பலமாக இருப்பதாக பொதுக் கூட்டத்தில் பிரதிக்ஞை ஏற்றுக் கொண்டனர்.

பீமலி புரத்திலுள்ள முதலாளியின் கையாட்கள் போலீஸைக் கொண்டு பயமுறுத்தி சில தொழிலாளர்களைக் காக்கினாடாவிற்குக் கொண்டு வந்தனர். காக்கினாடாத் தொழிலாளர்கள் கருங்காலிகள் வேலைக்குச் செல்வதை வெற்றிகரமான மறியல் மூலம் தடுத்து விட்டனர். எல்லாத் தொழிலாளர்களும் ஒன்று சேர்ந்து நகரத்தில் பெருத்த ஆர்ப்பாட்டங்களும் பொதுக் கூட்டங்களும் நடத்தி வருகின்றனர்.

### ஸ்டிவேர்டு கம்பெனி ஒழிக

3-2-39ல் காக்கினாடா துறைமுகத் தொழிலாளர் யூனியன், ஸ்டிவடோர் கம்பெனி, தொழிலாளர்களுக்கும், வியாபாரத்திற்கும் பாதகமாக இருப்பதால், அந்தக் கம்பெனியை அடியோடொழித்து விட வேண்டுமென்று தொழிலாளர்கள் இப்பொதுக் கூட்டங்களில் தீர்மானித்துள்ளனர்.

### தொழிலாளர்களுக்கு பேராதரவு

வேலை நிறுத்தத் தொழிலாளர்களுடன் காங்கிரஸ் கமிட்டி ஆதரித்து வருகிறது. மாணவர் சங்கத்தினர் தொழிலாளர்களுக்கு பக்க பலமாக இருந்து வேண்டுவன செய்து வருவதோடும், 20 ரூ. நன்கொடையும் அளித்திருக்கின்றனர். இன்னும் பல தொழிலாளர் சங்கங்கள் வேலை நிறுத்தத் தொழிலாளர்களுக்கு அரிசி மூட்டைகள் வழங்கி வருகின்றன.

பிப்ரவரி 6-ல் யூனியன், தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஸ்டிவடோர்டு கம்பெனிக்கு சமர்ப்பித்தது. கம்பெனி 4 நாட்கள் கழித்து தொழிலாளர் கோரிக்கைகளை அங்கீகரிக்க முடியாதென்று மறுத்து விட்டனர்.

### வேலைநிறுத்தம் வெற்றி பெற்றது

20 நாட்களாக நடைபெற்று வந்த வேலை நிறுத்தம், 18ந்தேதி இரவு வெற்றியுடன் முடிவடைந்தது. தொழிலாளர்களின் கோரிக்கைகளை எல்லாம் கம்பெனி அங்கீகரித்ததுடன், பகலில் 9 அணாவாக இருந்த சம்பளம் 11 அணாவாகவும், இரவு 12 அணாவாக இருந்த சம்பளம் 1 ரூபாயாகவும் உயர்த்தப்பட்டிருக்கிறது.

---

# சென்னையில் பொதுவேலை நிறுத்தம்?

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

தின் பேரில், அந்த அந்த கிளார்க்குகள் வீட்டிற்கு திரும்பி போய்க் கொண்டிருந்தனர். ஆனால், அங்கே இருந்த போலீஸ் உத்தியோகஸ்தர் அந்த கிளார்க்குகளை பிரஸ் உள்ளே அழைத்துக்கொண்டுபோய் விடுவதாக அவர்களிடம் கூறினதாகவும், அந்த கிளார்க்குகளை தன்னோடு அழைத்துக் கொண்டு வந்ததாகவும் தெரியவருகிறது. 8 ஸ்டிரைக் வாலிண்டியர்கள் சாத்வீகமாக மறியல் செய்தனர். உடனே அவர்களை போலீசார் கைது செய்தனர். அந்த பிரஸ் வாசற்படிக்கு எதிரே சுவர் ஓரமாக இருந்த ஓர் சிறு கூட்டத்தார்மீதும், பாதை (ரோட்) வழியே போய்க்கொண்டிருந்தவர்கள் மீதும், போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்ததாகத் தெரியவருகிறது. அங்கே ஸ்டிரைக்கை கவனித்துக்கொண்டிருந்த வாலிண்டியர் காப்டன் தோழர் சொக்கலிங்கத்திற்கு ரத்த காயம். ஆஸ்பத்திரிக்கு தோழர் சொக்கலிங்கத்தைத் தொழிலாளர்கள் கொண்டுபோய், காயங்களுக்கு மருந்து போட்டு கட்டிக்கொண்டு வந்தனர். காலில், ஜெனரல் ஆஸ்பத்திரியில் டாக்டர் இன்ஜக்ஷன் கொடுத்திருக்கிறார்.

### கண்ணை மூடிக்கொண்டு கைது செய்த விபரம்

ஆந்திரபத்திரிகா, பிரஸில் வேலை செய்யும் ஓர் தொழிலாளி—தோழர் முனுசாமி என்பவர் அகஸ்மாத்தாக, ஸ்டிரைக் எப்படி நடக்கிறதென்று பார்க்க வந்தவரைக் கூட, கண்மூடித்தனமாக இன்ஸ்பெக்டர் கைது செய்தார். செந்தொண்டர் (Red Volunteer) தோழர் தப்பு செட்டியை (மறியல் செய்யாதவரை) யும்கூட போலீஸ் உத்தியோகஸ்தர் கைது செய்து கொண்டுபோனாராம்.

மாஜிஸ்டிரேட் இந்த 10 தோழர்களுக்கும் 'கருணை கூர்ந்து' 2 மாத கடுங்காவல் தண்டனையை அளித்தார். அதோடு 6 மாதத்திற்கு நன்னடக்கையுடன் இருக்க ரூ. 25 பொறுமானமுள்ள இரண்டு நபர்கள் ஒவ்வொருவருக்கும் ஜாமீன் கொடுக்க வேண்டுமென்றும் தீர்ப்பில் கூறியிருக்கிறார்.

### பொதுவேலை நிறுத்தம் (ஜெனரல் ஸ்டிரைக்)

இந்நகரத்திலுள்ள அச்சுத்தொழிலாளர்கள், டையோசிசன் பிரஸ் தொழிலாளர்களுக்கு பக்கபலமாக இருக்கிறோமென்று தீர்மானித்துள்ளனர். மானேஜ்மெண்டார், யூனியனுடன் தகராறை தீர்த்துக்கொள்ளாது, திரும்ப பிரஸை திறந்தால், சென்னை நகரமெங்கும் அச்சுத்தொழிலாளர் ஜெனரல் ஸ்டிரைக் ஏற்படும்.

நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் மானேஜ்மெண்டார் அட்டூழியத்தை எதிர்த்து கிளர்ச்சி செய்யத் தயார்—தடியடி படவும் தயார். தங்கள் உரிமைகளை நிலை நாட்ட போலீஸ் துப்பாக்கிப் பிரயோகங்களையும் சட்டை செய்யப்போவதில்லை.

### ஓர் வேண்டுகோள்

தகராறை முடிக்காமல் பிரஸை திறக்கக்கூடாதென்று மானேஜ்மெண்டார் மீது சர்க்கார் தடை உத்தரவு போட வேண்டும்.

பொதுமக்கள், பொருள் உதவி முதல் சகல உதவிகளையும் ஸ்டிரைக்கில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு கொடுத்துதவ முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

தொழிலாளர்களும் ஸ்டிரைக் நிதிக்கு தாராளமாகபணம் கொடுத்து உதவ வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

மதராஸ் பிரஸ் லேபர் யூனியனுக்கு பக்கபலமாக சகல தொழிலாளர்களும் இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

# தொழிலாளர்கள் : : கவனிப்பார்களா?

இன்று, தொழிலாளர்கள் வாழ்க்கை உயருவதற்கு என்ன வழி? அதிகப்படியாக நன்மை பெறுவதற்காக, தொழிலாளர்கள், அந்தந்த தொழில் சங்கத்தில் அனைவரும் கட்டுப்பாடாக, ஐக்கியத்தோடு சேரவேண்டும். அழுத கண்ணீருடனும் சிந்திய மூக்குடனும், தொழிலாளர்கள் அவர்கள் குறைகளை முதலாளியிடம் தெரிவித்தால் எவ்வளவு தூரம் நன்மை கிடைக்குமென்று எதிர்பார்க்கிறார்களோ (அப்படி ஒன்றும் தானாகவே முதலாளி கொடுத்துவிடமாட்டான்) அதைவிட அதிகப்படியான நன்மைகள் தொழிலாளர்கள், சங்கத்தின் மூலமாகப் போராடினால்நிச்சயம் பெறலாம்.

* * *

தொழிலாளர்கள் உழைப்பில்லாவிட்டால் ஒரு காரியமும் உலகில் நடைபெறாது. எல்லோரும் இறந்துபோக நேரிடும். தலைமுறை தத்துவமாக தொழிலாளர்கள் சகல தொழில்களையும் செய்து வருகின்றனர். அப்படியிருந்துங்கூட, முதலாளிகள் இல்லாமல் எப்படி தொழில்கள் நடக்குமென்று நமது மக்களில் சிலர் கேட்பது தவறல்லவா?

* * *

சோஷியலிஸ்டு ஆட்சி நடைபெறும் சோவியத் ரஷ்யாவிலே, முதலாளிக் கூட்டமே இல்லை. உற்பத்திக்குரிய சாதனங்கள், தொழிற்சாலைகள், போக்குவரத்து சாதனங்கள், பாங்குகள் முதலியன உழைக்கின்ற கூட்டத்தாரிடத்தில்தான் இருக்கின்றன. ஆட்சியை நடத்துவதே உழைப்பாளிகள்தான். ஆனால், இன்று பாஸிஸ்டு நாடுகளில், ஏகாதிபத்ய நாடுகளில், பூர்ஷ்வா ஜனநாயக நாடுகளில், உற்பத்திக்குரிய சாதனங்கள், பாங்குகள், தொழிற்சாலைகள், போக்குவரத்து சாதனங்கள் முதலியன முதலாளிகள் கையில் இருக்கின்றன. அந்தந்தநாட்டை ஆள்வோரும் முதலாளிகளாகத்தான் இருக்கிறார்கள். ஆனபடியால்தான், முதலாளிகள் தங்களுக்கு அனுகூலமான சட்ட திட்டங்களையும், கோர்ட்டுகளையும், இவைகளுக்குப் பின் பலமாக போலீஸையும் இராணுவமும் வைத்திருக்கிறார்கள். எனவே, தொழிலாளர்களுக்கு சோஷியலிஸ்டு ஆட்சியைத் தவிர, மற்ற முதலாளித்வ ஆட்சிகளில் பூர்ண நன்மைகளைப் பெறவே முடியாது. ஆனால் ஒரு விஷயத்தை இங்கு கவனிக்க வேண்டும். பாஸிஸ்டு ஆட்சியில் தொழிலாளர்கள் வாழ்க்கை துன்ப மயம். ஏகாதிபத்ய ஆட்சியிலும் கிட்டத்தட்ட அந்த நிலைமையே. பூர்ஷ்வா ஜனநாயக ஆட்சியில் சிறிது நன்மைகள். ஆனால் சோஷியலிஸ்டு ஆட்சியான தொழிலாளர் ஆட்சியில், தொழிலாளர் வாழ்க்கை இன்ப மயம்.

* * *

முதலாளித்வ நாடுகளில் தொழிலாளர்கள் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ள, சௌகர்யம் பெற, முதலாளிகளுடன் போராடும்போது, முதலாளிகள் போனில் போலீசைக் கூப்பிட்டு, தொழிலாளர்கள் ஸ்டிரைக்கை முறியடிக்க 'பகீரத'ப் பிரயத்தனம் செய்கிறார்கள்.

* * *

தொழிலாளர்கள் தங்கள் நிலைமையை உயர்த்திக் கொள்ளப் போராடும் பொருளாதார போராட்டத்தில்கூட, தங்களுக்கு விரோதமாக போலீசும் சட்டமும் இருப்பதை பிரத்தியட்சமாகக் காணும்போது, சர்க்காருடனும் எதிர்த்துப் போராட வேண்டுமென்ற முடிவிற்கு தொழிலாளர்கள் வர வேண்டும். வந்து கொண்டிருக்கிறார்கள். ஆனபடியால்தான்நமது நாட்டில் நடக்கும் சுதந்திரப்போராட்டத்தில்,தொழிலாளர்கள் தீவிரப் பங்கெடுத்துக்கொண்டு, இந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை ஒழித்த பின், வயதுவந்தவர்களுக் கெல்லாம் ஓட்டுரிமை அளித்து, தேர்தலைநடத்தி, ஜனப்பிரதி நிதித்து வசபை மூலமாக தேசத்தை ஆள நேரிடும். ஆனால் அந்தஆட்சி தொழிலாளர் ஆட்சியாக இருக்காது. முழுதும் முதலாளி ஆட்சியாகவும் இருக்காது. இந்த கதம்ப ஆட்சியில், இன்று இந்த பிரிட்டிஷ் சர்க்காரின் கீழ் தொழிலாளர்கள் நிலை இருப்பதை விட, பல மடங்கு மேன்மையாக இருக்குமென்பதற்கு சந்தேகமே இல்லை. பொதுவாக நாட்டின் நிலைமையும் ஓர் அளவிற்கு உயரும். ஆனபடியால்தான் காங்கிரஸ் போராட்டங்களில் தொழிலாளர்கள் தீவிர பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று கம்யூனிஸ்டுகளும் சோஷியலிஸ்டுகளும் இன்று கூறி வருகிறார்கள்.

* * *

காங்கிரஸில், கம்யூனிஸ்டுகள் இருக்கிறார்கள். சோஷியலிஸ்டுகள் இருக்கிறார்கள். ஏகாதிபத்ய எதிரிகள் இருக்கிறார்கள். தனிவுடைமை விரும்பிகளும், பொதுவுடைமை விரும்பிகளும் இருக்கிறார்கள். காங்கிரஸிலுள்ள கம்யூனிஸ்டுகளும் சோஷியலிஸ்டுகளும் இந்தியா சுதந்திரமடைய வேண்டுமென்று கூறுகிறார்கள். ஏகாதிபத்ய எதிரிகளும் சுதந்திரம் வேண்டுமென்று விரும்புகிறார்கள். தனிவுடைமையை விரும்புவோர்களும் சுதந்திரத்தை விரும்புகிறார்கள்; பொதுவுடைமை விரும்பிகளும் சுதந்திரத்தை முதலில் விரும்புகிறார்கள். சுதந்திரம் பெற்ற பிறகுதான் சோஷியலிஸ்டு ஆட்சியை ஏற்படுத்த சோஷியலிஸ்டுப் புரட்சி ஏற்படும் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. காங்கிரஸிலுள்ள நிதான வாதிகளும் சுதந்திரத்தை விரும்புகிறார்கள். தீவிர வாதிகளும் சுதந்திரத்தை விரும்புகிறார்கள். ஆனபடியால் நம் நாடு பரிபூர்ண சுதந்திரம் உடனே பெற வேண்டுமென்பதில் காங்கிரஸிலுள்ள (Rank and file) ஐ, அதாவது காங்கிரஸிலுள்ள போராட்டத்தை விரும்பி நிற்கும் பெரும்பாலோரை உபயோகப் படுத்திக் கொண்டு, தீவிரமாகப் போராடி, முதலில் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தை ஒழித்து இந்தியா பரிபூர்ண சுதந்திரத்தை அடைய, தொழிலாளர்களின் அதாவது புராலிடேரியட்களின் பூர்ண ஞானம் பெற்ற கட்சியான—கம்யூனிஸ்டுக் கட்சித் தோழர்கள் காங்கிரஸில் தீவிரமாக உழைத்து வருகிறார்கள். எனவே காங்கிரஸ் கோரி நிற்கும் சுதந்திரப் போராட்டத்தில், தொழிலாளர்கள் அனைவரும் தீவிரமாக கலந்து கொள்ள கடமைப் பட்டிருக்கிறார்கள் என்பதை அறிக.

— (K. M.) —

# ஜில்லா போர்டுகள் : : என்ன செய்யவேண்டும்?

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு தொண்டர்படை ஏற்படுத்த உதவி அளிக்க வேண்டும்: இது நமது தேசியக் கோரிக்கைகளில் ஒன்றாகும். நாட்டுப்புறங்களிலே நமது மக்கள் பயிற்சி பெற்று, தொண்டர்படைகள் ஏற்படுத்திக் கொண்டால்தான் அவர்கள் சுறு சுறுப்பும், ஊக்கமும் பெறுவார்கள்.

த. நா. கமிட்டி திட்டத்தில் வியாதிக்காரர்கள் 'ஸ்டெரிலைசேஷன்' (Sterilisation) செய்யப்பட வேண்டு மென்கின்றனர். இது தற்போதைய நிலையில் நிறைவேற்றக் கூடிய திட்டமல்ல.

பிரசவஉதவி அதிகரிக்க வேண்டும். டூரிங் டிஸ்பென்ஸரிகளும் ஏற்படுத்தலாம். இவைகளில் மருந்துகள் சுத்தமாயிருக்க வேண்டும். சரியானவையாயிருக்க வேண்டும்.

கல்வி விஷயத்தில் நமது ஜில்லா போர்டுகள் எத்தனையோ செய்யலாம். பல கிராமங்களில் இப்பொழுது பள்ளிக்கூடமே கிடையாது. ஆரம்பக் கல்வி கட்டாயமாயில்லை. ஆரம்ப ஆசிரியர்கள் நிலையை உயர்த்தி, அவர்கள் ஊக்கமுடன் வேலை செய்வதற்கு வேண்டிய சௌகர்யங்கள் அளிக்க வேண்டும். ஸெகண்டரிப்பள்ளிக்கூடங்களில் தேர்ச்சியுள்ள மாணவர்களுக்கு உயர்தரக் கல்வி கற்க உதவி அளிக்க வேண்டும். படிப்பின்மை என்ற இருளை அகற்றிவிட வேண்டும். முதியோர்களும் கல்வி கற்று, ஊக்கமுடன் கல்வியைப் பரப்ப ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

பள்ளிக்கூடங்களில் புத்தகங்கள் தேசீய உணர்ச்சியை அளிப்பவையாக விதிக்க வேண்டும். புத்தக சாலைகள் பட்டணங்களிலும், கிராமங்களில் டூரிங் புத்தக சாலைகள் ஏற்படுத்த வேண்டும்.

கிராமங்களைச் சீர்திருத்த, குடிசைக் கைத்தொழில் பிரசாரம் முதலியன செய்ய வேண்டுமென்று மேற்படி திட்டம் கூறுகின்றது. கிராமப் புனருத்தாரணம் செய்ய பல சமூகப்போக்குகள் குறுக்கிட்டு நிற்கின்றன. கிராமங்களுக்கும், நகரங்களுக்கும் உள்ள பேதங்களைக் குறைத்து, மக்களிடம் அளவற்ற உணர்ச்சியும் ஊக்கமும் ஏற்படுத்திய பின்னரே கிராம புனருத்தாரணம் ஏற்பட முடியும். உடனடியாக கிராமாந்திரங்களிலுள்ளவர்களின் தேசிய உணர்ச்சியை வளர்த்து, அவர்களுக்கு வேண்டிய உதவி அளிக்க வேண்டும்.

திட்டத்தின் இறுதியில் சில கேள்விகள் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றிற்கு அளிக்கப்படும் பதில்கள் மூலம் ஒருவித சர்வே ரிபோர்ட்டுத் தொடுக்கலாம். அவ்வித ஆராய்ச்சி அவசியமே. ஆனால் அக்கேள்விகட்கு விடையளிக்க வேண்டிய ஆராய்ச்சி வேண்டும். அவகாசம் வேண்டும். நமது காங்கிரஸ் கமிட்டிகள் ஆங்காங்குள்ள பிரமுகர்களுடன் கலந்து கொண்டே ஒவ்வொரு ஊரிலும் பொறுமையுடன் விஷயங்களை அறிந்து கொண்டேதான் விடைகளளிக்க முடியும்.

# சென்னைப் பிரதம மந்திரி கவனிப்பாரா?

★

—(சோஷியலிஸ்டு)—

18-2-39-ல் பக்கிங்காம்-கர்னுடிக் மில் வெல்பேர் கமிட்டி வருடாந்திர விழாவிற்கு தாங்கள் தலைமை வகித்து பேசியதின் ஒரு பகுதி பின் வருமாறு:

"தொழிலாளர்கள், கூலிதான் முதன் முதலில் கொடுப்பட வேண்டும்; பிறகுதான லாபம் என்கிறார்கள். இங்குதான் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் வித்யாசமிருக்கிறது. ரொம்ப கவனமாகத் தங்கள் கணக்கை முதலாளிகள் பார்க்க வேண்டியிருக்கிறது. என்ன இருந்தாலும் ஒரே விஷயத்திற்கு கூலி லாபம் என்ற இரண்டு மாறுபட்ட பெயர்கள் இருக்கின்றன. ஒரு பகுதி கூலி என்று கூறப்படுகிறது. மற்றோர் பகுதிலாபமென்று கூறப்படுகிறது. கூலி என்பது லாபத்தின் முன் பணமாக கொடுக்கப்படுகிறது. ஆனபடியால் கூலி என்பதைப்பற்றி அகௌரவம் எதுவும் இருப்பதாக நீங்கள் நினைக்க வேண்டாம். இந்த 'முன் பணத்தை' அதிகமாக நீங்கள் எடுத்துக்கொண்டால், மற்ற நன்மைகளைக் குறைந்த அளவிற்கே பெற நேரிடும். நீங்கள் நன்றாக வேலை செய்து, அதிகப்படியாக லாபத்தை முதலாளிகளுக்குச் சம்பாதித்துக் கொடுத்தால், நீங்கள் அதிகப்படியாக சம்பளம் பெறுவீர்கள்; அதிகப்படியாக லீவும், அதிகப்படியான சௌகரியமும் அடைவீர்கள்."

நமது பிரதம மந்திரிக்கு இங்கு ஒரு சில விஷயங்களைத் தெரிவிக்க கடமைப்பட்டுள்ளேன். அதாவது பக்கிங்காம்—கர்னுடிக் மில் வெல்பார் கமிட்டியையும் அதன் வருடாந்திரவிழாவையும், இந்த இரண்டு மில்களில் வேலை செய்யும் தொழிலாளர்களில் பெரும்பாலோர் வெறுக்கிறார்கள். காரணம் என்னவென்றால், முதலாளிகள் கங்காணிகளையே கொண்டதாக இருக்கிறது இந்த வெல்பேர் கமிட்டி. அதோடு மதராஸ் லேபர் யூனியனின் பலத்தைக் குறைக்கவே, முதலாளிகள் இந்த தங்கள் வெல்பேர் கமிட்டி மூலம் காரியங்களை நடத்தி வருகின்றனர். முதலாளிகளின் சூழ்ச்சி வலையில் தொழிலாளர் தலைவர்கள் இன்று வரை அகப்பட்டுக் கொள்ளவில்லை. ஆனால், தாங்கள் அந்த வலையில் போய் சிக்கிக்கொண்டீர்கள். சென்ற வருடம் நீக்கப்பட்டவர்களில் மீதமுள்ள 6 தோழர்களை ஏன் இன்னும் வேலைக்கு எடுத்துக்கொள்ளவில்லை. உடனே முதலாளிகள் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று பேசிவிட்டு வரக்கூடாதா? உடனே அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டுமென்ற கட்டளையை முதலாளிகளுக்கு போட்டுவிட்டு வரக்கூடாதா? தங்களுக்குத் தெரியாத விஷயத்தைப்பற்றியும் கூட்டத்தில் பேசிவிட்டு வந்திருக்கிறீர்கள்.

கூலி என்பது என்ன என்ற விஷயத்தை, தங்கள் கவனத்திற்குக்கொண்டுவரக் கடமைப்பட்டிருக்கிறேன். மார்க்ஸ் தான் எழுதிய கூலி, தொழில், மூலதனம் (Wage, Labour and Capital) என்ற புஸ்தகத்தில், மிகத்தெளிவாக இதை விளக்கிக் காட்டியுள்ளார். "கூலி" என்பது முன்னதாகவே செய்திருக்கும் சரக்கின் ஒரு பகுதியைக் கொண்டு தொழிலாளியிடமிருந்து, உற்பத்தி செய்யும் உழைப்பின் சக்தியை முதலாளி வாங்குவதேயாகும்."

மார்க்ஸ், டாஸ்காப்படலில் (Das Capital) எழுதியிருப்பதாவது:—

"எங்கும் தொழிலாளி, முதலாளிக்குத்தன் உபயோக மதிப்பின் (Use-Value) உழைப்பின் சக்தியை முன்னதாக கொடுத்து விடுகிறான். இந்த உழைப்பின் சக்தியை முதலாளி உபயோகப்படுத்திக் கொண்ட பிறகுதான், தொழிலாளிக்கு கூலி கொடுக்கப்படுகின்றது. அதாவது, எங்கும் தொழிலாளி முதலாளிக்கு நம்பிக்கையின் பேரில் தன் உழைப்பின் சக்தியை விற்கிறான்."

* * *

### பட்ஜெட் பிரசங்கம் (தொழிலாளர் சம்பந்தமாக)

பிரதம மந்திரி:—"தொழிலாளர்களின் நிலைமையில், முன் இருந்ததைக் காட்டிலும் இப்பொழுது விசேஷ அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன. தொழிலாளர்கள் சங்கங்களும் அவர்களது உரிமைகளும் அங்கீகரிக்கப்பட்டன............ வர்க்கப்புரட்சி தோன்றுவதற்கு நீண்டகாலம் ஆகும் எனபதும், கோஷங்கள் போடுவதிலிருந்து தொழில்களே அடியோடு மறைந்து விடக்கூடிய பலாத்கார முறையில் மாறிவிடக்கூடும் என்னும் விஷயத்தையும், சர்க்கார் தொழிலாளிகள் முதலாளிகள் மத்தியில் இருக்கும் கடலைத் தாண்டுவதற்கு பலமடைய வேண்டுமென்பதும், தொழிலாளர்கள் மத்தியில் தீவிரமாகவும், சதா அவர்களுடனேயே இருந்து வரும் காரணங்களால் செல்வாக்குப் பெற்ற நல்ல தேச பக்தி பொருந்திய நமது இளைஞர்கள் இதை உணர்வதில்லை ........"

நமது பிரதம மந்திரியின் பிரசங்கத்தில் ஒரு சில விஷயங்கள் கவனிக்கத் தக்கன.

தொழிலாளர்கள் மத்தியில் வேலை செய்துவரும் தீவிர இளைஞர்கள் செல்வாக்கு பெற்றவர்கள். இவர்கள் தொழிலாளர்கள் மத்தியில் பாடுபட்டுக்கொண்டே தேச விடுதலையை கோரிவருகிறார்கள். சர்க்கார் அடக்குமுறையை உபயோகித்து, இந்த கிளர்ச்சியை அடக்க முன் வரும் போது, குற்றத்திற்கு அளவு மீறிய தண்டனையைக் கொடுக்கிறது. இவைகள் ஒரு புறம் இருக்க, பிரதம மந்திரி முதலாளிகளை புகழ்வதைப் பார்த்தால், சமீபத்தில் தொழிற்சட்டம் வரும் என்பது, பம்பாயில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்படுத்திய தொழிற் சச்சரவு சட்டத்தை மிஞ்சி விடுமோ என அஞ்சுகிறோம்.

* * *

### மாணவர்களுக்கு உபதேசம்

"ஏழைகளிடமிருந்து பறித்துக்கொண்டு வருவதை, சரியான வழியில் நாம் செலவழிக்க வேண்டும். இதற்கு மாறாக, போதுமான கவனம் படிப்பில் செலுத்தாது பரீட்சையில் தோல்வி அடைந்து போவதாலும், அல்லது உபாத்தியாயர்களிடத்திலும், யுனிவர்சிட்டி புரபசர்களிடத்திலும் சண்டை போட்டுக்கொண்டு, ஸ்டிரைக்குகளை உண்டாக்குவதும், யுனிவர்சிட்டிகளை அதிகாரிகள் மூடிவிடும்படி நடப்பதும், இவைகளெல்லாம் ஏராளமான பணம் வீணாகப் போவதையே காட்டுகிறது" என்று மதராஸ் யுனிவர்சிடி மாணவர்களுக்கு, யுனிவர்சிட்டி மாணவர்கள் யூனியன் வருடாந்திரக் கொண்டாட்டத்தின்போது, சென்னையில் இந்த வாரம் தாங்கள் உபதேசம் செய்துள்ளீர்கள்.

அதோடு, வி. எஸ். சீனிவாச சாஸ்திரியைப் போன்ற உலகப் புகழ்படைத்த உத்தமர் தனது யுனிவர்சிட்டிகளுக்கு கிடைப்பதே பாக்கியமென்றுங் கூட தனிப்பட்ட நபர்களை உயர்த்திப் பேசியிருக்கிறீர்கள். ஒரு விஷயத்தை மட்டும் தங்கள் பேச்சுக்களில் நான் (தாங்கள் பிரதம மந்திரியான பின் கூறி வரும் தங்களுடைய பேச்சுக்களில்) காண்கிறேன். அதாவது, மக்கள் வெறுக்கும் போலீஸ் டிபார்ட்டுமெண்டை புகழ்ந்து பேசுவதும், தொழிலாளர்களை கசக்கிப் பிழிந்துவரும் முதலாளிகளை உயர்த்திப் பேசுவதும், அவர்களுக்கு இல்லாதிருக்கும் உதார குணங்களையும், கருணைகளையும் கற்பித்துக்கொண்டு தாங்கள் பேசி வருவதும் சர்வ சாதாரணமாய் போய்விட்டது.

உலகப் புகழ்படைத்ததாகச் தங்களால் சொல்லப்படும் சாஸ்திரியார், புகழ்ச்சிக்கே உரிய பேர்வழி அல்ல என்பதை அவர் நடவடிக்கையிலிருந்தே அக்ரமமாக நீக்கிய 6 மாணவர்களை திரும்ப யுனிவர்சிட்டியில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்ற சிறிய கோரிக்கையை "உலகப் புகழ்படைத்த உத்தமர்" அதற்கெனப் பிடிவாதமாக போலீஸாரை பள்ளிக்கூடங்களில் விட்டு, மாணவர்களை குண்டாந்தடிக்கு இரையாக்கி ஏன் வேடிக்கை பார்த்தார்? ஏன் உதறித் தள்ளிவிட்டார். உள்ள விஷயத்தை விட்டுவிட்டு ஊரைச் சுற்றித் திரிவானேன். தாங்களாவது 6 பேரையும் யுனிவர்சிட்டியில் திரும்ப எடுத்துக் கொள்ளும்படி சாஸ்திரியாருக்கு உபதேசம் செய்வதை விட்டுவிட்டு, ஏதேதோ பேசி வருவது சரியல்ல, நியாயமுமல்ல. தங்களைப் போன்றவர்களுக்கு ஒத்ததுமல்ல. யுனிவர்சிட்டியையே விட்டுவிட்டு உடல் நலமில்லை என்று ஓடி வந்துவிட்ட வீண்

(19-ம் பக்கம் பார்க்க)

பொடியில் சிறந்தது பட்டணம் பொடி

அதிலும் சிறந்தது அப்பாதுரை பொடி

40 வருடங்களாகப் போற்றப்படுவதும் இதுவே!

மணம், குணம், காரம் எல்லாம் நிறைந்தது. வாங்கும்போது விலாசத்தை கவனியுங்கள்.

விவரங்களுக்கு:—ஆ. அப்பாதுரை முதலியார் அண்டு சன்,

தபால் பெட்டி நெ. 189, சென்னை.

சிறு கதை

# “பாஸிஸ்டு நாகரீகம்”

மானிடர்களின் எலும்புக் கூடுகளின் மீது கட்டப்பட்டுள்ளது இன்றைய உலகின் நாகரீகம். மிகவும் குரூரமும், பார்க்கப்பயங்கரமும் கொண்டுள்ளது அதன் வழி. ஒரு சிலரின் நன்மையின் பொருட்டு பெரும்பான்மை மக்கள் தங்கள் வாழ்வை மறந்து உயிரிழந்து மறைகின்றனர். அவர்களின் எலும்புக் கூடுகள் உலகின் ஒவ்வொரு பாகத்திலும் குவியல் குவியலாய் குவிக்கப் பட்டுள்ளன. இன்று உயிர் வாழும்மக்களும் வெறும் நடைப் பிணங்களேயன்றி வேறல்ல. இவைகளே இன்றைய நாகரீகத்தின் கண் கண்ட அத்தாட்சி. இதுவே இன்று பணக்கார உலகில் நாகரீகம் செல்லும் வழி.

ஸ்பெயினில் ‘ராகு’ அதிகாரம் கொண்டுள்ளான். ஜனரல் பிராங்கோவின் பார்வை அதன் மீது பட்டு விட்டது. பின் ஆண் பெண் அயர்ந்துறங்குவ தெங்கனம்? உண்ணுதல் உறங்குதல் குடித்தல், நடத்தல் — இவையனைத்தும் அபராதம், அதர்மம், அநியாயம், அக்கிரமம், போலும். மனிதவுருக்கொண்ட பிணந்தின்னும் பிசாசுகள், ‘நரர்’களின் எலும்புக் கூடுகளின்மீது நர்த்தனம் புரிகின்றன.

பார்சிலோனியா மீது அன்று குண்டுமாரி பொழிந்தது. மக்கள் வெலன்சியா பக்கம் விழுவிழுந்து விரைந்தவண்ணமிருந்தனர். பார்சிலோனியா-வாலன்சியா மெயில், மக்களைச் சுமந்து, பக் பக் கென புகை விடுத்து, உரத்த தொனியில், “ஏ உலகத்தினரே! இதோ இரத்த வெறியன் பிராங்கோவின் அற்புத விளையாட்டுகள்” எனப் பறைசாற்றுவது போல் வீறிட்டு விசிலடித்து, வாலன்சியாவில் பாஸிஸ்டு நாகரீகத்தின் செய்தியைச் சடுதியில் சேர்ப்பிக்க அதி சீக்கிரமாய் சமுத்திரக் கரையை யொட்டி கட கடவென உருண்டோடிக் கொண்டிருந்தது.

பொழுது புலர்ந்தநேரம் கதிரவன் கீழ்த்திசையில் கிளம்பினான். அவன் செங்கிரணங்களிலகப்பட்ட வஸ்துக்களனைத்தும் பளபளவென உருக்கி வார்த்த தங்கம்போற் பிரகாசித்தன. நாற்புறமும் மனோஹாரதிருஷ்டி. ரயிலின் ஒரு தரப்பில் பூமி ஆகாயத்தைப் பிணைத்து நிற்கும் பிரம்மாண்டமலை. அதில் நெட்டையுங் குட்டையுமாய் வளர்ந்துள்ள மரஞ் செடி கொடிகளடர்ந்தகாடு. இடையிடையே சலசலவென ஓடி நிற்கும் ஓடைகளும் நதிகளும். மறு பக்கம் அலைகள் நிரம்பிய பரந்த சமுத்திரம்.

இயற்கை இங்ஙனம், உயிர் தப்ப மிரண்டு பறக்கும் உள்ளங்களைத் தேற்ற முழு பலத்துடன் முயற்சித்தது. ஆனால் வெருண்ட கண்களுக்கு இதில் எதும் ரம்மியமில்லை. பகைவனின் பறக்கும் கப்பல் எங்கு வந்துவிடுமோ வென முன்னும் பின்னும் ஆண் பெண் அனைவரும் நோக்கிய வண்ணமிருந்தனர். வாயு வேகத்திலிருக்கும் புகை வண்டி அவர்களுக்கு எறும்பு ஊர்வதுபோல் தோன்றியது. தன்னாலானமட்டும் முயன்று வண்டி இன்னும் வாலன்ஷியா ஸ்டேஷனை அடையவில்லை. முன்னேக ஏக, வாலன்ஷியா நகரும் ரயிலைவிடப் பன்மடங்கு அதிக வேகத்தில் தன்னிடத்தை விட்டுப் பெயர்ந்து ஓடுகின்றதுபோலும்.

வண்டி ‘மலகா’ என்ற கிராமத்தைக் கடந்து கொண்டிருந்தது. எங்கிருந்தோ ஆகாய விமானங்கள் அண்டம் கிடு கிடுத்த குரலுடன் ஒரு கூட்டமாய் அங்கு வந்தன. சிறிது நேரத்தில் வானத்தில் ‘சட சட சட’ வென்றதும் நெஞ்சில் திகில் கொண்ட மக்கள் ஒருவரை யொருவர் பீதியுடன் கட்டிப் பிணைத்தனர். அடுத்த நிமிடம் தண்டவாளம் சென்ற விடம் தெரியவில்லை. எஞ்சின் நொறுங்கியது. வண்டிகள் சுக்கு நூறாகின. மேல் நோக்கிக் கிளம்பியது புகையும் தூசியும். தரையின் மீது துடித்தன ‘நர’ முண்டங்கள். அவைகளில் சில முழு முண்டங்கள்—சில சிதறிய துண்டங்கள்.

தப்பிய சிலர் மலையின் பக்கம் உயிர் பிழைக்க விரைந்தனர். விமானங்கள் கீழிறங்கின. நிராயுதபாணிகளாய்ஓடும்மனிதரைத் துரத்திச் சுட்டு வீழ்த்தினர் பாஸிஸ்டு கலகக்காரர்கள். அது சமயம், தன் தாய்தந்தை, மனைவி மக்கள், சகோதரசகோதரி அனைவரையும் ‘பாஸிஸ்டு நாகரீகத்திற்கு’ப் பலி கொடுத்த ஒரு வாலிபன், தனது மனோ இச்சையைப் பூர்த்தி செய்யத் தருணம் கிட்டியதெனமகிழ்வெய்தி, கையில் ஒரு துப்பாக்கியுடன் மலைக்குகையினின்று கலகக்காரர்களை நோக்கி வெளிக்கிளம்பினான். சட்டென சிறிதுநேரம் குண்டுகள் பறந்தன. பொத்துப் பொத்தென பூமி மீது விழுந்தன உயிர் இழந்த சரீரங்கள். வாலிபனும் பராக்கிரமத்துடன் சண்டையிட்டு வாழ்வில் கடைசி முறையாக பூமிமீது சாய்ந்தான். பின் கலகக்காரர்களும் விமானமேறிப் பறந்தனர். சண்டையில் விழுந்த தம் தோழர்களை கவனிக்க அவர்கள் அவசியமெனக் கருதவில்லை. இவ்வளவு கருணை ஹிருதயம் கொண்டிருப்பின், ஆயுதமற்ற மக்களை, அதிலும் ஆண்பெண் சிசுவென்ற பாகுபாடற்று துவம்சம் புரிவரோ?

அப்பிரதேசத்தில் யுத்தம் ஆரம்பமானதுமுதல் ‘மலகா’ கிராமவாசிகள் இரவில் வெளியேறி, க்ஷேமலாபங்கள் விசாரித்து,வேண்டிய உணவு சாமான்கள் பெற்று, தத்தம் இல்லேகி, கதவு தாளிட்டு, ‘நாளை இரவிற்குள் என்ன நேருமோ’ வெனத் திகிலெய்தி ஆலோசிப்பது வழக்கம். அவர்கள் வெளி நடமாட்டங்களெல்லாம் இரவில் அந்தகாரத்திலேதான். ஆகவே மேற்குறித்த விபத்து நடந்த இரவு ‘பாலகா’ தன் வீட்டினின்று வெளியேறி பயங்கர இருளில் மலைக்குகைகளை யணுகி ‘பாஸிஸ்டு வேட்டை’க்குப் பலியான பாமரர்களைத் தேடி நின்றாள். சற்று முன்னே பொறுக்க முடியாத வேதனையுடன் முணு முணுக்கும் குரல்கேட்டு பக்கத்தே சென்று, அச்சரீரத்தைப் பக்குவமாய் கைகளிலேந்தி தன் வீடு ஏகினாள். கிராமத்தில் அக்கம்பக்கத்தினரும் காயமடைந்த மனிதனைக்காணக் குழுமினர்.

—(எஸ். கிருஷ்ணன்)—

அவன் கலகக்கூட்டத்தினருள் ஒருவன் எனத் தெரியவந்ததும் சிலர் ஆக்ஷேபித்தனர். சிலர் காயங்களைக் கண்டு பரிதாபம் கொண்டனர்.

“பாலகா நீ செய்வது சரியல்ல” என்று கிளம்பியது ஒரு குரல்.

“இது என் கடமை” என்றாள் பாலகா.

“ஆனால் இவன் சத்துரு.”

“காயமடைந்தோர் விரோதிகளல்ல.”

“இது யுத்தம் என்பதை மறந்தனையோ?”

“யுத்தமா? இல்லை. இது கொலை. படுகொலை. யுத்தம் சேனை வீரர்களுக்குள்ளல்லவோ நடக்கும்.”

சின்னேரத்திற்கப்பால் கிராமவாசிகள் சென்று விட்டனர். பாலகா அவனுக்குச் சிகிச்சைகள் புரிந்து படுக்கையில் கிடத்தி விட்டாள். மூர்ச்சை தெளிந்த பின் ஆரஞ்சுப்பழரசம் ஒரு கிளாஸ் கொடுக்கப்பட்டது. பதினைந்து தினங்களுக்குப் பின் அவன் சுகமடைந்தான். ஒரு நாள் காலை பாலகா, புண்களில் மருந்திட்டு பாண்டேஜ் கட்டிக் கொண்டிருந்தாள். அவள் கைகள் நடுங்கின.

“பாலகா! இன்று ஏன் உன் கைகள் நடுக்கம் கொள்கின்றன” எனக் கேட்டான் அவ்வாலிபன்.

“ஒன்றுமில்லை மைக்கி” என்றாள் அப்பெண்.

“நீ பொய் சொல்கின்றாய்.”

“இல்லை. நான் உரைப்பது உண்மை” எனக் கூறினாள் அந்நங்கை. ஆனால் அவள் கண்களில் நீர்பெருகி, குரல் கம்மியது. மைக்கி அவளது கரங்களைத் தன் கைகளிலேந்தி “பாலகா நீ ஏன் அழுகின்றாய். உண்மையை ஒளியாதுரை” என்றான்.

“மைக்கி, நீ குணமடைந்து விட்டாய். இனி உன் பழைய வேலையைத்...”

“இல்லை, பாலகா இனி உன்னை எங்கனம் விட்டுப் பிரிவேன்.”

“நீ எவ்வாறு என்னுடனிருக்க முடியும். நீயோ...”

“இல்லை, பாலகா, இல்லை. இனி நான் மனித சமூகத்தின் விரோதியல்ல. உனது கோமள கரங்கள் எனது கடின ஹிருதயத்தைமாற்றி அன்பையும், கருணையையும் உண்டாக்கிவிட்டது. மேலும் உன்னை எங்கனம் நேசிக்கின்றேன் என்பதை நீ அறியாயோ?” என அவன் கூறி வருகையில், பாலகாவின் முகம் நாணத்தால் சிவந்தது. பேச்சை மாற்ற வெண்ணி, “மைக்கி, இன்று ஆரஞ்சு ரசம் தீர்ந்து விட்டது. இதோ காப்பி தயார் செய்து தருகின்றேன்” எனக் கூறி அவ்விடத்தை விட்டகன்றாள்.

* * *

45 நாட்கள் கடந்தன.

நடுப்பகலில் பாலகா காப்பி தயாரித்துக் கொண்டிருந்தாள். “கிர்ர்ர்” என்ற பயங்கர சப்தத்துடன் அக்கிராமத்தின் மேலே விமானங்கள் பறந்தன. அடுத்த நிமிடம் ‘சட்டச்சட சட்டச் சடட்டா’ அவ்வளவுதான். ஆகாயத்தை நோக்கித் தூசி கிளம்பிற்று. வீடுகள் இடிந்து விழுந்தன. பூமி பிளந்தது. “கலகக்காரர்கள்.........ஓடு ஓடு.......... மலைக் குகை...குண்டு மாரி...” என்று மக்களின் ஓரே குரல்மயம். பலர் மலையின் பக்கம் பறந்தனர்.

மைக்கியும், பாலகாவும் ஒருவரை யொருவர் நோக்கினர். அதன் கருத்தை வாய்விட்டுச் சொல்லாமலே அறிந்தவர்களாய் இருவரும் கைகளில் துப்பாக்கியேந்தி வெளிக் கிளம்பினர். வாசலைத் தாண்டியதும் தலைக்கு மேலே ஒரு விமானம் பறந்தது. பாலகா அதன் இறகில் குறி வைத்தாள். சிறிது தூரம் சென்று விமானம் பூமி மீது ‘டமார்’ என விழுந்து நொறுங்

(18-ம் பக்கம் பார்க்க)

# ஒற்றுமைதான் காங்கிரசின் மூலபலம்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

மந்திரிசபைகள் மாகாணங்களில் ஏற்பட்ட பிறகு, காங்கிரஸ் வேலைகளில் திட்டமில்லாமல் இருப்பதாகவும், காரியங்கள் முன் கூட்டிய ஆலோசனையின்றியே நடப்பதாகவும், அபிப்பிராயப்படுகிறது. சமஷ்டி சம்பந்தமாகக் காங்கிரஸினுடைய மனப்பான்மையில் இது மிகவும் அதிகமாகப் பிரதிபலிக்கின்றது. இந்தியா கவர்ண்மெண்டு சட்டம் பூராவையும் எதிர்த்து, அதை ஒழிக்க வேண்டுமென்ற கடமையை நாம் மேற்கொண்டுள்ளோம். ஆயினும், நடைமுறையில், நாம் அனுஷ்டிக்கும் கொள்கை, மாகாணங்களில் நிர்வாகத்தை நடத்திக் கொண்டே போவதிலும், சமஷ்டி திணிக்கப்படும் வரையில் காத்துக் கொண்டிருப்பதிலுமே, நம்மைக் கொண்டுபோயிருக்கிறது. இம்மாதிரிக் காத்துக்கொண்டு, திட்டமில்லாமல் வேலை செய்யும் கொள்கையைக் கண்டிப்பாக நிறுத்திவிடும்காலம் வந்து விட்டது என்று கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

இந்தியா கவர்ண்மெண்டு சட்டம் எதிர்க்கப்படுவது மாத்திரமல்லாமல், சாத்தியமான குறைந்த கால அளவிற்குள் அது ஒழிக்கப்படுமென்றும், காங்கிரஸின் மேற்பார்வையில் நமது சுய-நிர்ணய உரிமையை சீக்கிரத்தில் அனுஷ்டிக்கவேண்டிய சக்தி திரட்டப்பட வேண்டுமென்றும், நன்கு விளக்கப்பட வேண்டும். காங்கிரஸ் ஸ்தாபனங்களின் வளர்ச்சியையும், நாளுக்கு நாள் அதிகரிக்கும் அவைகளின் செல்வாக்கையும் சக்தியையும், தொழிலாளர்களுக்குள்ளும், விவசாயிகளுக்குள்ளும் ஏற்பட்டிருக்கும் உணர்ச்சியையும், ஸ்தாபன வளர்ச்சியையும், சமஸ்தானங்களில் மக்களின் போராட்டங்களையும் இப்போராட்டங்களின் விளைவாக மக்களின் ஜனநாயக உணர்ச்சிக்கும் அன்னிய அரசாங்கத்திற்கும் ஏற்பட்டுள்ள பலத்த போராட்டத்தையும், கூர்ந்து கவனிக்கையில், சரியான முறையில் இந்த சக்திகளையெல்லாம் தேசியப் போராட்டத்தில் இணைத்தால் சமீபத்திலேயே ஏகாதிபத்தியத்தை அறைகூவி அழைக்கும்படியான மாபெரும் சக்தியாக இவைகளை மாற்றிவிடலாமென்று கமிட்டி திடமாக அபிப்பிராயப்படுகிறது. மேலும், ஸர்வதேசத் துறையில் ஏற்பட்டுள்ள மோசமான நெருக்கடியினால், பிரிட்டிஷ் சர்க்கார் இன்று திணறிக் கொண்டிருக்கிறது. ஆகவே' திட்டமாகவும், உணர்ச்சியுடன் கூடியதுமான அப்படிப்பட்ட கொள்கையை திரிபுரி காங்கிரஸ் நிர்ணயிக்க வேண்டுமென்று, கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

தேசத்தில் சட்ட சபைகளிலும், அவைகளுக்கு வெளியிலும், நடக்கும் நடவடிக்கைகளையும், சமஸ்தான மக்களின் போராட்டங்களையும் ஒருங்கே இணைக்கவேண்டியது மிகவும் அவசியமானதென்று கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. பார்லிமெண்டரி திட்டத்தின் வேகத்தை துரிதப்படுத்தி முன் யோசனையுடன் மக்களின் போராட்ட சக்தியையும், குறிப்பாக விவசாயி, தொழிலாளர்களின் இயக்கங்களையும் வளர்ப்பதற்காக, அதை உபயோகித்துக் கொள்ள வேண்டும். மேலும், விவசாயி, தொழிலாளர் இயக்கங்களில் காங்கிரஸ் அதிகமான ஆதரவும் ஊக்கமும் காட்டி, இந்த ஸ்தாபனங்களுக்கும் காங்கிரஸிற்குமுள்ள சம்பந்தத்தை மிகவும் நெருங்கியதாகச் செய்ய வேண்டும். மக்களின் மேற்கூறிய பல்வேறு இயக்கங்கள், ஏக காலத்தில் ஒன்று சேர்த்து, இணைத்து, தேச விடுதலை ஆர்வம் என்ற கேந்திரத்தைச் சுற்றியதாக அமைத்தல் வேண்டும். மேலும், இதே சமயத்தில் வளர்ந்திருக்கிற சமஸ்தான மக்களின் போராட்டத்திற்குக் காங்கிரஸ் மிகவும் அதிகமான ஆதரவு அளிக்க வேண்டும். ஜன நிர்ணய சபைக்கூட்டி, சுதந்திர இந்தியாவின் அரசியல் சட்டத்தை நிர்ணயிக்கக்கூடிய சக்தி, இப்படிப்பட்ட நிலைமையில் வெற்றி பெற்று நிற்குமென்று கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

★


## படங்கள்
## விற்பனைக்குத் தயார்

★

லெனின்
ஸ்டாலின்
ராஷ்டிரபதி போஸ்
ஸ்ரீ ஜவஹர்லால் நேரு
ஜீவானந்தம்
முத்துராமலிங்கத்தேவர்

முதலியவர்கள் படங்கள் மிகவும் குறைந்த விலைக்குக் கிடைக்கும். விவரங்களுக்கு கீழ்க் கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

**The Tamilnad Socialist Literature Publishing House**
*270, Triplicane, High Road, Madras.*


# சென்னையில் தொழிலாளர்கள் 'ஸ்ட்ரைக்'

### M. P. H.-ல் ஸ்ட்ரைக்

இந்தப் பிரஸ் சென்னை மவுண்ட் ரோடில் இருக்கிறது. இதில் வேலை பார்க்கும் எல்லாத் தொழிலாளர்களும் மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் மெம்பர்கள். யூனியன் தொழிலாளர்களின் குறைகளைப் போக்குவதற்குப் பல முயற்சிகள் செய்து வந்திருக்கிறதுடன், இதற்குமுன் இந்தப் பிரசில் வேலை நிறுத்தம் ஏற்படவேண்டிய நிலைமையிலிருந்ததையும், யூனியன் முயற்சியால் வேலை நிறுத்தம் இல்லாமலே காரியம் சித்தியாயிற்று.

ஆனால் 23-2-39-ல் பிரஸ் மானேஜர் ஒரு தொழிலாளியை திடீர் நோட்டீஸ் கொடுத்து வெளியேறச் சொன்னார். மற்றத் தொழிலாளர்கள் எல்லாம் இந்த அநியாயமான செய்கையை ஆட்சேபித்தனர். பிரஸ் முதலாளிகள் "தங்கள் மனம் போல் வேலை செய்ய வேண்டும்; இல்லையானால் தொழிலாளர்கள் வெளியே போய் விட வேண்டுமென்று" கூறினர். முதலாளிகள், தொழிலாளர்கள் வாயினால் சொன்னால் போகமுடியாதென்று கூறினார். முதலாளிகள், தொழிலாளர்கள் சொன்னபடி வேலை செய்யாததினால் வெளியோ போய்விட வேண்டுமென்று நோட்டீஸ் போர்டில் நோட்டீஸ் போட்டபின், தொழிலாளர்கள் வெளியே வந்துவிட்டனர்.

24-2-39 காலை மறியல் செய்த தொழிலாளர்கள் முதலில் 10 பேரும் பின்னால் 14 பேரும் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். போலீஸ், லாரியுடன் தயாராய் பிரஸ் கேட் பக்கம் பாராக் கொடுத்து வருகிறது. தொழிலாளர்கள் உற்சாகமாகவும் தைரியமாகவும் இருக்கிறார்கள்.

### சூளைமில் வேலை நிறுத்தம்

23உயிலிருந்து வேலை நிறுத்தம் நடைபெற்று வருகிறது. மில் வாயில் முன் மறியல செய்த 10 தொழிலாளர்கள் போலீஸாரால் கைது செய்யப்பட்டனர். 4 தொழிலாளர்கள் நிரபராதிகளெனக் கூறி மாஜிஸ்திரேட் விடுதலை செய்துவிட்டார். 6 பேர்கள் மீது வழக்கு தொடரப்பட்டிருக்கிறது. மில் மூடப்பட்டிருக்கிறது. மில்லை போலீஸார் காவல் புரிந்து வருகின்றனர்.

★

### சென்னைக் கடற்கரையில் தொழிலாளர் பொதுக்கூட்டம்

23-2-39 மாலை 6 மணிக்கு சென்னை ஹைக்கோர்ட் கடற்கரையில் காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சி, மதராஸ் பிரஸ் லேபர் யூனியன், டிராம்வே தொழிலாளர் சங்கம் இவைகளின் சார்பில் சிட்டிவலஸா துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டிக்க தோழர் K. V. வரதராஜலு தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் C. P. இளங்கோ, B. ஸ்ரீனிவாசராவ், K. முருகேசன் முதலியோர்கள் பேசினர். கூட்டத்தில் சித்திவலசாத் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், டையோசிசன பிரஸ் தகராறைத் தீர்க்காமல் பிரஸ்ஸை முதலாளிகள் திறக்க விடக் கூடாதென்றும், விம்கோ மாச் பாக்டரியில் ஏற்பட்ட சம்பவத்தை ஒரு பகிரங்க விசாரணை நடத்த வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

கூட்டத்திற்கு வந்திருந்த சிட்டவாலஸா யூனியன் தலைவர் தோழர் சுப்பாராவும் அங்கு நடந்த விஷயங்களை விளக்கிக் கூறினார்.

### மதிப்புரை

நாஷனல் பிரண்ட்—இந்த சிறந்த தேசீய முன்னணி வாரப் பத்திரிகையின் இரண்டாம் வருஷத்து முதல் மலரை நாம் பூர்ண திருப்தியுடன் வரவேற்கின்றோம். இந்தியா முழுதும், தேசத் தொண்டில் மார்க்ஸிஸ்ட் கொள்கைகளைத் தழுவி, ஐக்கிய முன்னணியை வளர்க்க இந்த வாரப் பத்திரிகை, புகழத்தக்க பணிசெய்து வருகின்றது. இப்பத்திரிகையின் ஆசிரியர்கள் தேர்ச்சி பெற்ற மார்க்ஸிஸ்டுகள். வீரத்தியாகிகள்.

இரண்டாவது வருஷ ஆரம்ப இதழ், அழகான கலர் பிரிண்டிங் அத்துடன் ராஷ்டிரபதி வாழ்த்துச் செய்தியுடன் வெளிவந்துள்ளது. தலையங்கத்திலும் அதிலுள்ள கட்டுரைகளிலும் ஒற்றுமையின் அவசியம் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது.

சுருங்கச் சொல்லின், இந்தியத்தேசிய காங்கிரஸ் சிறப்பாக ஒற்றுமையுடன் வளரவேண்டுமென்று விரும்புவோருக்கு, இப்பத்திரிகை இன்றியமையாதது.

Manager, NATIONAL FRONT
62-E, Girgaom Road, Bombay 4.

## மலையாள ஜன்மி முறைக்குச் சாவுமணி

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

லும், பாலைகளிலும், பரவிச் சிதறி குடிசையில் வாழும் பல கிசான்களை திரட்ட கிசான் தோழன் ஒவ்வொருவனும், குழலூதல் மூலம் திரட்டுக்கிறான். குழல் சப்தம் கேட்டதும், நாலா பக்கங்களிலிருந்தும் எங்கிருந்து வருகிறார்கள் என்பதே தெரியவில்லை. கிசான்கள் திரண்டுவந்து கூடி விடுகிறார்கள்.

கிசான் சங்கங்கள் ஏற்படுவதன்முன், இந்த கிசான் குடும்பங்கள் விழாக் காலங்களில்தான் அருமையாகக் கூடும். தற்போதெல்லாம், காட்டிலோ மலைச் சரிவிலோ, மைதானத்திலோ எங்கு கூட்டினும் திரள் திரளாக கூடி விடுகின்றனர்.

இப்படி காடு கரைகளில் பல கஷ்டங்களிடையே இந்த கிசான்களிடைகலந்து தொண்டாற்றும் தோழர்கள், உணர்வுமிகுந்த ஊக்கமும், உள் வலியும் எப்படி இருக்கும் என்று யோசியுங்கள். மலையாளம் இப்படி நூற்றுக் கதிகமான தோழர்களை கொண்டுளது. இப்போது வட மலையாளம் முழுதும் புத்துயிர் பெற்று உணர்வு ததும்பி உற்சாகத்துடன் தயாராய் இருக்கிறது.

ஜன்மிகளின் கொடுமையை எதிர்த்து கிஸான் சபைகள் மூலம் ஆங்காங்கே போராடி வருகிறார்கள்.

### பலரும் ஒன்றுக!

இதற்கு மலையாள கிசான்களும் தோழர்களும் தலை தூக்கின் பலனில்லை. பிற மாகாண கிசான்களும், இந்தியாவெங்கும் சிதறிக் கிடந்து தவிக்கும் கிசான்கள் எழுந்து ஒன்றுபட வேண்டிய அவசியத்தை உணர்தல் வேண்டும். மலையாள குடிவார மசோதா திருத்தப்பட தமிழ்நாடு, கர்நாடகம் ஆந்திரா கிசான்கள் விழித்தெழ வேண்டும். சென்னை மந்திரி சபைக்கு அறிவுறுத்த வேண்டும். இல்லையேல் தனி ஜில்லாவுக்காக உதவிமந்திரிசபை முன் வராது.

### இறக்குமதி வரி வேண்டும்

மேற்கு கிழக்குத் துறைகளில் இலங்கை கொப்பரை, தேங்காய்களை நம கடைகளில் இறக்கி இங்குள்ள வியாபாரத்தை பாழ்படுத்தும இலங்கை இறக்குமதிமீது, வரிவிதிக்க சர்க்கார் முன்வரவேண்டும்.

இதனிடையே மலையாள கிஸான் சபை, தங்கள் கோரிக்கையை பரப்பி, நலனடைய சாத்வீகமாகவும் அமைதியாகவுமே கிளர்ச்சி நடத்திவருகிறது. இப்படியே இருக்கும் என்ற உறுதியும் கூறலாம். கடைசிவரை சகல முறையும் கையாடி நிவர்த்தி மார்க்க மேற்படா விட்டால், பின்னயே, சத்யாக்ரஹத்தில் இறங்கும். இப்படி இருக்க, மலையாளத்தின் பல பாகங்களிலிருந்தும், பல பொய் குற்றங்களின்கீழ் 140 கிஸான்கள், நீதிஸ்தலத்திற்கு கொண்டுவரப்பட்டிருக்கின்றனர். அநேக ஜென்மிகளின் வீட்டிலேயே போலீஸ் தாணக்கள் ஸ்தாபிக்கப்பட்டு, பல கூலிக்குவரும் போக்கிரிகளைக் கொண்டு கிசான்களுக்கும் கொடுமைகள் செய்யப்பட்டு வருகின்றன. இதனால், பல கிசான்கள் தங்கள் விவசாயத்தை சாந்தமாக செய்துவர முடியவில்லை.

---

### "பாஸிஸ்ட்டு நாகரீகம்"

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

கியது. பின் இன்னுமொரு விமானம். அதன் மேல் குறி வைப்பதற்குள் கலகக்காரர்களின் குண்டுகள் பாலகாவைத் தாக்கின. மைக்கியும் தன்னாலானமட்டும் முயன்றான். ஆனால் அவைகளனைத்தும் வீண் பயனற்றுவிட்டது. பாலகா காயமுற்று விழலானாள்.

மைக்கி அவளைத் தன் மடிமீதிருத்தி தளதளத்த குரலில், "பாலகா, பாலகா, என்னைத் தனியே விட்டு நீ செல்கின்றாயோ?" என்றான். பாலகா பேசும் சக்தியற்றிருப்பினும் மிகவும் கஷ்டத்துடன்,

"மைக்கி! வருந்ததே பாஸிஸத்தை ஒழித்து மனிதவர்க்கத்திற்கு சாந்தியை அளி. இதுவே எனது கடைசிப் பிரார்த்தனை" எனக்கூறி உயிர் விட்டாள்.

பின் மைக்கி?......மைக்கி சவத்தை அவ்விடத்தே அடக்கம் செய்து பெருமூச்செய்தி முன்னேகிறான். அவனது தோளில் துப்பாக்கியும், கையில் தோட்டாப் பெட்டியும், முகத்தில் சாந்தமும், நடையில் உறுதியும் இருந்தன. அவன் ஒன்று, மனித சமூகத்தை பாஸிஸத்தினின்று விடுவிப்பான். அல்லது இச்சுதந்திரப் போரில் கடைசி மூச்சு வரைப் போராடி பாலகா சென்ற வழி செல்வான். இதுவே அவன்கொண்ட பிரதிக்ஞை. அவனது உதடுகள் "பாஸிஸம் ஒழிக! ஜன நாயகத்துவம் ஓங்குக" என்ற மந்திரத்தை உச்சரித்துச் சென்றன.

(ஆங்கிலத்தினின்று மொழி பெயர்க்கப்பட்டது)

## ஜெர்மனி காலனிகளை விரும்புவதேன்?

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்பொழுது தனிப்பட்ட ஒரு அரசாங்கமும் இதற்கு பொறுப்பில்லாததால் — நடக்கும் அக்ரமங்களுக்கு யாரைக் கேட்பது?

### சேம்பர்லேன்—ஹிட்லர் சூழ்ச்சி

ஹிட்லரின் காலனிக் கிளர்ச்சியைக் கண்டு சேம்பர்லேன் காலனிகளை ஹிட்லருக்குக் கொடுத்து விடுவாரென்று நம்ப இடமில்லை. அங்ஙனம் செய்தால், ஏற்கெனவே குறைந்து போன பிரிட்டனின் மதிப்பு அடியோடழிந்து போவதுடன், பிரிட்டனின் நாடுகள் கட்டுக்குலைந்து பிரிந்து போகும். கனடா தேசம் தனக்கும் பிரிட்டனுக்கும் உள்ள கட்டுப்பாட்டை—அடக்கு முறையிலிருந்து தன்னை பிரிட்டன் காப்பாற்றும் என்று கொண்டிருந்த நம்பிக்கையாகிய கட்டுப்பாட்டை— அறுத்து, அமெரிக்க ஐக்ய நாடுகளையே உதவிக்கு நாடும். சேம்பர்லேன், பாஸிஸ வளர்ச்சிக்காகத் தன்னால் இயன்ற உதவி செய்யத் தயாராய் இருக்கின்றார். ஏன்? பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தைக் காப்பாற்றும் நோக்கத்துடன்தான் என்பதை மறவாதீர்கள். சேம்பர்லேன் காலனிகளை ஹிட்லருக்கும் தனக்கும் நடுவில் பாங்காக உபயோகிப்பாரே யொழிய, காலனிகளைக்கொடுக்கமாட்டார்.

காலனிகளிடமிருந்துதான் சுரண்டுவதில் பங்கு ஹிட்லருக்குக் கொடுப்பார். காலனிகளை இவ்விருவரும் சேர்ந்து சுரண்டு தலைப்பற்றிய நோக்கம் ஏற்கனவே லண்டன் "டைம்ஸ்" பத்திரிகையில் தலையங்கத்தில் வெளியாயிருக்கிறது. ஹிட்லரை மேற்கிலிருந்து திருப்பி சோவியத் ரஷ்யாவை எதிர்க்கச் செய்ய நான்கு வல்லரசு உடன்படிக்கை மூலமாக பாங்குகள் போன்ற சர்வ தேச கமிஷன்கள் ஏற்படுத்தப்படும். ஏகாதிபத்யம் பாஸிஸத்துடன் கூடி இதுவரை குடியரசு உரிமைகள் பெற்ற காலனிகளை நொறுக்கி சுதந்திரத்திற்குப் போராடுபவர்களை ஒடுக்கி, அடக்குமுறையை அதிகப்படுத்தி, கூட்டுக்கொள்ளையைப் பின்பற்றிச் செல்லும். இத் திட்டம் சேம்பர்லேனுக்கு மிக இஷ்டமான திட்டம். சோஷியலிஸ்டுகள் இத்தகைய மிரட்டல்களை எதிர்த்துப் போராட வேண்டும்.

### செய்ய வேண்டியது என்ன?

சோஷியலிஸ்டுகளும் முற்போக்கு எண்ணமுடையவர்களும் பாஸிஸத்தையும் ஏகாதிபத்யத்தையும் எதிர்க்க ஒன்று கூடவேண்டுமென்பதை யுணர்ந்தால், ஒருவரை ஒருவர் அடக்கி ஆள்வதையும், வல்லரசு ஆட்சியையும் முறியடிப்பதுடன், உலகில் குடியரசு ஆட்சியை நிலை நிறுத்த முடியும். ஏகாதிபத்ய நாடுகளில் இருப்பவர்கள் இத்தகைய ஒற்றுமையை உணராவிட்டால், பாஸிஸத்தையும் ஏகாதிபத்தையும் எதிர்த்துப் போராட ஒற்றுமையை வேண்டாவிட்டால், சுதந்திரத்திற்காகப் போராடும் மக்கள் தாங்கள் போராடுவது பாஸிஸத்துடன்தான் என்பதை உணராது, குடியரசு அல்லாத நாடுகளுடன் சேர்ந்து கொண்டால், அவர்கள் தங்களைத் தாங்களே காட்டிக் கொடுத்துக் கொள்வதுமல்லாமல், சுதந்திரப் போராட்டம் படுகுழியில் வீழ்த்தப்படும். ஆகையால், தூங்கும் மக்களைத் தட்டி எழுப்பி, காலனிப் பிரச்சினைகள் எழும் சமயத்தில், சுதந்திரத்திற்காகப் போராட சோஷியலிஸ்டுகள் இப்பொழுதே முயல வேண்டும்.

---

### சோஷியலிஸ்டுகள் கடமை

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

முறையாவது தமிழ் நாடெங்கும் நடக்க வேண்டும்; கூட்டங்களும் நடைபெற வேண்டும். கட்சித் தோழர்கள் இந்தக் கூட்டங்களில், வரும் சுதந்திரம் போராட்டத்தில் ஆயிரக்கணக்காக மக்கள் கலந்துகொள்ள வேண்டிய அவசியத்தை விளக்கிக் கூற வேண்டும்.

சகல கூட்டங்களிலும் கட்சிப் பத்திரிகைகளையும், பிரசுரங்களையும் விற்க வேண்டும்.

சரிவர வேலை செய்யாதவர்களை கட்சியிலிருந்து விலக்கி விட வேண்டும்.



# கிருஷிகர் பகுதி

### குடியானவர் கூட்டம்

கோட்டையூரில் 19-2-39ல் நடந்த பொதுக்கூட்டத்தில், தோழர் எஸ். என். நம்பிச்சாமி, எம். நடராஜன், கிருஷ்ணசாமி முதலியவர்கள் முறையே கொடியின் தத்துவத்தைப்பற்றியும், மந்திரிகள் இதுவரை செய்து வந்த நன்மை தீமைகளைப்பற்றியும், ஜமீந்தாருக்கும் குடியானவருக்கு மிடையே இருக்கும் நெருக்கடியைப்பற்றியும் சொற்பொழிவாற்றினர். பிரகாசம் கமிட்டி ரிப்போர்ட்டை உடனேயே அமுலுக்குக்கொண்டுவரவேண்டுமென்று தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

### பரக்களக்கோட்டையில் விவசாயிகள் கூட்டம்

மரவக்காடு விவசாய வாலிபர் சங்கத்தின் ஆதரவில் நடந்த பொதுக்கூட்டத்தில், தற்கால இளைஞரும் கிராம சேவையும் என்பதைப்பற்றியும், காங்கிரசும் கிராமத்தார்களின் கடமையைப் பற்றியும், கிராமக் கைத்தொழிலைப்பற்றியும், கிராம முன்னேற்றத்திற்கு வேண்டிய கல்வி முறையைப்பற்றியும், விவசாயிகளின், தொழிலாளிகளின் துயரத்தைப் பற்றியும், இவைகளுக்கு இன்றியமையாத சோஷியலிஸக் கொள்கைகளைப்பற்றியும் தோழர் பொதியப்பத் தேவர் உட்பட பல தோழர்கள் சொற்பொழிவாற்றினார்கள்.

### கிராமங்களில் விவசாயிகள் சங்கம்

14-2-39உ புதன்கிழமை, ஆவுடையபுரம் ஸ்ரீ மாடாசாமி செட்டியார் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் மருதங்கிணறு விவசாயிகள் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது.

அதேபோல் 15-2-39ந் தேதியில் ஆராய்ச்சிப்பட்டியில் ஓர் விவயாயிகள் சங்கமும் 16ந் தேதியில் மருக்காலங் குளத்தில் ஓர் விவசாயிகள் சங்கமும் ஸ்தாபிக்கப்பட்டன.

### விவசாயிகள் மகாநாடு

பலபத்ர ராமபுரத்தில் தோழர் சண்முகத் தேவர் அவர்கள் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில், கூடிய சீக்கிரம் கழுகுமலை விவசாயிகள் மகாநாடு கூட்ட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அதற்குள்ள வேலைகள் ஆங்காங்கே துரிதமாக நடைபெறும்.

### ஜனங்களின் அபிப்பிராயம் தேவை !

கொச்சியில் குடியானவர்களுக்காக கொண்டு வந்திருக்கும் குடியானவர் கடன் நிவாரண மசோதாவின்மேலும் இன்னும் பொதுக்கடன் நிவாரண மசோதாவின் மேலும், ஜனங்களின் உண்மை அபிப்பிராயத்தை அறியகொச்சி சர்க்காரர் பல கேள்விகளை யடங்கிய பிரசுரங்கள் ஜனங்களிடையே விநியோகித்திருக்கின்றனர். மார்ச்சு இரண்டாம் தேதி இவைகளுக்கு ஜனங்களில் பெரும்பாலோர் எவ்வாறு திருத்தம் வேண்டுமென்கிறார்களோ அதன்படி ஏற்றுக் கொள்ளப்படுமென்று கொச்சி சமஸ்தான கெஜெட் தெரியப்படுத்துகிறது.

### குடியானவர்களின் தீவிரம்

அமராவதியின் (மகாராஷ்டிரா) குடியானவர்கள் தங்களிடமிருந்து பல கொடிய முறைகளால் பணம் வசூலித்து வருவதை பலமுறைக் கண்டித்திருந்தும், இம் முறைகள் ஒழியும் வரை நிலவரி கொடுப்பதில்லை என்றும் முடிவு செய்துவிட்டனர்.

### அருப்புக்கோட்டையில் ஆர்ப்பாட்டமும் பெருங்கூட்டமும்

7-2-39-ந் தேதி அருப்புக் கோட்டை தாலுகா விவசாயிகள் சங்கத்தின் சார்பில், சுமார் 6,000 விவசாயிகள் ஏர், வண்டி, மண்வெட்டி, வாச்சாத்து, கூடை, முறம், முதலிய கருவிகளுடன் கூடிய ஓர் மாபெரும் ஊர்வலம் நடந்தது. தோழர் K. காமராஜின் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில், J. கருப்பையா, K. S. முத்துசாமி, சாது K. குருசாமி முதலியவர்கள் பேசினர். பிரகாசம் கமிட்டியின் ரிப்போர்ட்டை அதிசீக்கிரம் அமுலுக்கு கொண்டுவர வேண்டுமென்றும், மழையில்லாததால் இவ்வருடநில வரியை பாதியாவது குறைக்க வேண்டுமென்றும், சுபாஷ் போஸை ராஷ்டிரபதியாக தெர்ந்தெடுக்கப்பட்டதைக் குறித்து அளவிலா ஆனந்த மடைவதாயும், அவர் கொள்கைகளை மக்கள் எல்லோரும் ஆதரித்து சமஷ்டியை தகர்த்தெறிய தயாராயிருக்கிறதாகவும் தீர்மானங்கள் நிறைவேறின.

## அறிக்கை

"ஜன சக்தி"யில் பிரசுரம் செய்வதற்கு அனுப்பும் செய்திகளும் கட்டுரைகளும் பிரதி வாரமும் செவ்வாய்க் கிழமைக்குள் வந்து சேர வேண்டும்.

எழுதியனுப்புகிறவர்கள் தெளிவாகவும், காகிதத்தின் ஒரே பக்கத்திலும், மையினாலும் விஷயங்களை மிகச் சுருக்கமாகவும் எழுதியனுப்ப வேண்டும்.

ஆசிரியர்

# சமஸ்தானப் போர்

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

### லிம்டி

இங்கு நடைபெற விருந்த பிரஜா மண்டல மகாநாட்டிற்கு தலைமை வகிக்கவந்த தர்பார் கோபாலதாஸ், லிம்டி ரயில்வே ஸ்டேஷனில் வந்ததும், சுமார் 2500 காலிகள் வழி நெடுக அவரை விடாமல் தடை செய்ய நிறுத்தப்பட்டிருந்தனர். போலீஸிற்கு தகவல் கொடுக்கப்பட்டும் நிலைமை ஒன்றும் சரிப்படவில்லை. பல தொண்டர்களைக் காலிகள் தாக்கி யிருக்கின்றனர். சுற்றுப்புறக் கிராமங்களிலிருந்து மகாநாட்டில் கலந்து கொள்ள ஏராளமான விவசாயிகள் வந்து குவிந்தனர். ஆனால் அவர்களையும் காலிகள் போஜன சாலையில் சூழ்ந்து கொண்டனர். நிலைமையை விளக்கி வைசிராய், காங்கிரஸ் தலைவர் முதலியவர்களுக்கு தந்தி அடிக்கப்பட்டிருக்கிறது.

காலிகளின் அட்டகாசங்களையும் கடந்து, மகாநாடு ஸ்ரீமதி முன்ஷி தலைமையில் நடந்தேறியது. மகாநாட்டிற்கு ராஷ்டிரபதி போஸ் அ. இ. சமஸ்தானப் பிரஜைகள் மகாநாட்டுத் தலைவர் ஜவஹர்லால் நேரு, காந்திஜி இன்னும் சில தலைவர்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருக்கின்றனர்.

### பிரிட்டிஷ் ஏஜண்டு— ஒரிசா பிரதம மந்திரி சம்பாஷணை

தனக்கும் ஏஜெண்டிற்கும் நடைபெற்ற சம்பாஷணைகளைப் பற்றி ஒரிசா பிரதம மந்திரி ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா கீழ்க்கண்ட அறிக்கை வெளியிட்டிருக்கிறார்:- "சமஸ்தானங்களில் நல்ல சர்க்கார்கள் இருக்கவே, இந்திய அரசியல் இலாகா சம்மதப்படவில்லை. நீலகிரியில் இரண்டு மாதங்களுக்குமுன் பிரஜா மண்டல் சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்டது. ஆனால் தர்பார் சொன்ன கூலிக்கு பிரஜைகள் வேலைசெய்ய மறுத்ததால், பிரஜா மண்டல் மீது சர்க்கார் தடை விதித்திருக்கின்றனர் என்பதைக் கேட்டுத் திடுக்கிட்டேன்.

### மந்திரிகள் ராஜினாமா ?

சில தினங்களாக பத்திரிகைகளில், சமஸ்தான நிலைமையை காரணமாக வைத்து, மந்திரிகள் ராஜீனாமாச் செய்வார்கள் என்றும், சில மந்திரிகள் ஜதாக்களை தலைமை வகித்து நடத்திச் செல்வார்கள் என்று முதலில் பத்திரிகைகளில் செய்திகள் பிரசுரமானதும், பின் அவை தவறென்று பத்திரிகைகளில் பிரசுரமாயின. ஆனால் இன்று (21-2-39) வார்தாவில் இருந்துவரும் பத்திரிகைச் செய்திப்படி, திடீர் என்று மந்திரிகள் ராஜீனாமாச் செய்யமாட்டார்கள் என்றும், திரிபுரிக் காங்கிரஸ் முடிவு செய்கிறவரைக்கும் காங்கிரசும், காங்கிரஸ் தலைவர்களும் சமஸ்தானம் போராட்டங்களுக்கு யோசனைதான் கூறுவார்களென்றும் தெரிகிறது. ஆகவே இந்த வருடம் திரிபுராக் காங்கிரஸ் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறவர்கள் எல்லோரும் ஏகமனதாக ராஷ்டிரபதி போஸ் காட்டும் நேரிய வழியைப் பின்பற்றுவார்களாக.

---

## அன்றும் இன்றும்

சென்ற வருஷம் ஹரிபுரா காங்கிரஸில், சமஸ்தான பிரச்னை சம்பந்தமாக, காங்கிரஸ் நடந்து கொள்ளும் போக்கைப் பற்றி தீவிர வாதிகளுக்கும், காந்திய வாதிகளுக்கும் அபிப்பிராய பேதம் இருந்தது. ஆனால் இந்த வருஷம் திரிபுராவில் கூடும் காங்கிரஸில், சமஸ்தானங்கள் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில் தீவிர வாதிகளுக்கும், காந்திய வாதிகளுக்கும் ஏகோபித்த அபிப்பிராய மிருக்கு மென்று இப்பொழுதே தெரிகிறது. சமஸ்தான போராட்டங்களை அகில இந்திய காங்கிரஸே தலைமை வகித்து நடத்த வேண்டுமென்று தீவிர வாதிகள் கூறி வருவதை, இன்று காந்திய வாதிகளும் உணர்ந்து விட்டனர். எனவே, திரிபுரா காங்கிரஸிற்குப் பின், இந்திய சமஸ்தான மெங்கும் தீவிரப் போராட்டத்தைக் காணலாம்.

சமஸ்தானங்களில் தீவிரமாக காங்கிரஸ் தலைமை வகித்து நடத்தப்போகும் போராட்டங்கள், சமஷ்டி எதிர்ப்பையும் இந்தியா முழுதும் வளர்க்கும். காங்கிரஸ் பலமும் அதிகரிக்கும். பிரிடிஷ் ஆட்சிக்கும் இந்தியாவில் முடிவு காலம் சமீபித்து விட்டது.

---

### சென்னை பிரதம மந்திரி கவனிப்பாரா?

(15-ம் பக்கத் தொடர்ச்சி)

பிடிவாதமும், வரட்டு ஜம்பமுள்ள சாஸ்திரியாரைப்பற்றி தாங்கள் புகழ்வதும் சரியல்ல. யுனிவர்சிட்டி அதிகாரிகள் தான் தோன்றித்தனமாக நடந்து கொண்டு, மாணவர்களை தெருவில் விட்டுவிட்டு வேடிக்கை பார்ப்பதை தாங்களும் பார்த்துக்கொண்டிருப்பது நியாயமா? அதிகாரிகளுக்குச் சரியான உபதேசம் செய்வதை விட்டு, அவர்களை தாங்கள் புகழ்வது விந்தையாகவே இருக்கிறது.

**JANA SHAKTI**

உள்நாடு:—

| | |
|---|---|
| வருடச் சந்தா ரூ. | 3-0-0 |
| தனிப் பிரதி | 0-1-0 |

மலேயா:—

| | |
|---|---|
| வருடச்சந்தா ரூ. | 6-0-0 |
| தனிப் பிரதி | 0-2-0 |

பர்மா:—

| | |
|---|---|
| வருடச் சந்தா ரூ. | 4-8-0 |
| தனிப் பிரதி | 0-1-6 |




# ஜனசக்தி



**READ**

**CONGRESS SOCIALIST**

(Organ of the All-India Congress Socialist Party)

### சென்னை டிராம்வே அண்டு எலெக்டிரிக் சப்ளை தொழிலாளர் பொதுக்கூட்டம்

மேற்படி கூட்டம் தோழர் B. சீனிவாசராவ் தலைமையில் பீப்பிள்ஸ் பார்க்கில் 21-2-39-ல் நடைபெற்றது. டிராம்வே ஓர்க்ஷாப் தொழிலாளியும், செங்தொண்டருமான தோழர் துரைசாமி அகால மரணமானதற்கு வருந்தி, அவர் சங்கத்திற்கு செய்த சேவையை பல தோழர்கள் பாராட்டிப் பேசினர். அனுதாப தீர்மானமொன்றை கூட்டத்திலுள்ளோர் அனைவரும் எழுந்து நின்று நிறைவேற்றினர். தோழர்கள் V. S. சோமசுந்திரம், C. P. இளங்கோ, நரசிம்மன், நடராஜன் முதலியோர், டிராம்வே ஏஜண்டு தொழிலாளர் கோரிக்கைகளுக்கு சரிவர ஜவாப்பு கொடுக்காததைக் கண்டித்தும், தொழிலாளர் கட்டுப்பாடாக இருந்து, தங்கள் கோரிக்கைகளை உடனுக்குடன் நிவர்த்தித்துக் கொள்ள தயாராக இருந்து வரவேண்டிய அவசியத்தையும் வற்புறுத்திப் பேசினர். சித்கவலசா போலீஸ் துப்பாக்கி பிரயோகத்தைக் கண்டித்து தீர்மானமொன்றும் நிறைவேறியது.

### மதராஸ் பிரஸ் லேபர் யூனியன்

21-2-'39-ல், டையோசிசன் பிரஸ் அருகாமையில் யூனியன் பொதுக் கூட்டமொன்று, யூனியன் தலைவர் தோழர் வரதராஜுலு தலைமையில் நடைபெற்றது. டையோசிசன் பிரஸ் மானேஜ்மெண்டாரை, காங்கிரஸ் மந்திரிகள் நிர்பந்தப்படுத்தி, ஸ்டிரைக் வெற்றிபெற உடனே தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று, தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்திருப்பதைப் பாராட்டி கூட்டத்தில் பல தோழர்கள் பேசினார்கள்.

### தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம்

மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் தொழிலாளர்கள் சுமார் 2000 தோழர்களும், டிராம்வே சங்கத் தொழிலாளர்கள் சுமார் 1500 தோழர்களும் ஆக 3500 தோழர்களடங்கிய ஊர்வலமொன்று, 19-1-39ந்தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை சென்னை நகரின் பல பாகங்களில் தொழிலாளர் கோஷங்களை கூறிக்கொண்டு சென்றுவிட்டு, இரவு 8 மணிக்கு காங்கிரஸ் மண்டபத்தில் ஊர்வலம் வந்து சேர்ந்து கலைந்தது.

## விவசாயிகளைப்பற்றிய சில புள்ளி விபரங்கள்

தோழர் ஜவகர்லால் 1936ம் வருஷம் அலகாபாத்தில், காங்கிரஸ் கமிட்டியிலேயே, அரசியல் பொருளாதார பிரசுர இலாக்கா என்று ஒன்றை ஏற்படுத்தினர். இந்த இலாக்காவின் முதல் பிரசுரம் "இந்தியாவின் விவசாய பிரச்சினை" என்பதைப் பற்றியே. இந்த பிரசுரம் தோழர் ஜவகர்லால் முன்னுரையுடன் கூடியது. இதன் ஆசிரியர் பிரபல சோஷியலிஸ்டு தோழர் Z. A. அகமட். கீழே பிரசுரிக்கப் பட்டிருக்கும் சில புள்ளி விபரங்கள் 1936ம் வருஷம் வெளிவந்த அந்த புஸ்தகத்திலிருந்தே எடுக்கப் பட்டவை:

பிரிட்டிஷ் இந்தியாவில் சொந்த நிலமுடையோர் விபரம் 1926ம் வருஷத்திய இந்திய விவசாய ஜெர்னலில் பிரசுரிக்கப்பட்டிருப்பது பின் வருமாறு:

| நிலம் | 100க்கு |
|---|---|
| ஒரு ஏக்கராவிற்குள் | 22 பேர் |
| 1 ஏக்கராவிலிருந்து 5 ஏக்கரா வரை | 33 ,, |
| 5 ஏக்ராவிலிருந்து 10 ஏக்கரா வரை | 24 ,, |
| 10 ஏக்கராவிற்கு மேல் | 24 பேர் |

* * *

சென்ற உலக யுத்தத்திற்கு முன், பிரிட்டிஷ் இந்தியாவில் சராசரி ஒரு ஏக்கராவிற்கு உற்பத்தி (நல்ல விளைவு என்பவைகளையும் சேர்த்துத்தான்) மதிப்பு ரூ. 25க்கு மேற்போக வில்லை. ஆனால் ஜப்பானில் ரூ. 150க்குக் குறையவில்லை. (சர். விஸ்வேஸ்வரய்யா)

* * *

1870ம் வருஷம், தாதாபாய் நௌரோஜி இந்திய மக்களின் வருஷ வருமானம் ரூ 20 என்றும், அதோடு, ஏதோ உயிர் உடலில் இருக்க, மக்கள் செலவு செய்யும் குறைந்தபட்ச செலவே, வருமானத்தைவிட அதிகமாக இருந்ததென்றும் கூறியிருக்கிறார்.

* * *

1880-ம் வருஷம், சர்க்கார் விவசாயிகள் சராசரி வருமானம் நபர் ஒருவருக்கு ரூ. 18 என்று மதிப்பிட்டிருக்கின்றனர்.

* * *

எர்ல் குரோமர், டேவிட் பார்பர் இருவரும், மக்களின் சராசரி வருமானம் நபர் ஒருவருக்கு ரூ. 27 என்று மதிப்பிட்டிருக்கிறார்கள்.

* * *

டிக்பி எழுதிய "செழிப்பான பிரிட்டிஷ் இந்தியா" என்ற புஸ்தகத்தில், சராசரி வருமானம் நபர் ஒருவருக்கு ரூ. 18-4-0 என்று இருக்கிறது. விவசாயி வருமானம் ரூ. 9 என்ற விபரமும் அந்த புஸ்தகத்தில் இருக்கிறது.

* * *

லார்டு கர்ஸான் விவசாய மக்களின் சராசரி வருஷ வருமானம் ரூ. 20 என்றும், தேச மக்களின் சராசரி வருஷ வருமானம் ரூ. 30 என்றும் 1901-1902 வருஷத்தில் கூறியுள்ளார்.

* * *

வாடியா, ஜோஷி இருவரும் 1913-14-ம் வருஷ வருமானம் ரூ. 44-5-6 என்று கூறி யிருக்கின்றனர்.

* * *

ஷா, கம்பாட்டா இருவரும் 1900-1914-ம் வருஷ வருமானம் ரூ. 36 என்றும், 1914-1922-ம் வருஷ வருமானம் ரூ. 58-8-0 என்றும் கூறியுள்ளனர்.

* * *

1928-ம் வருஷ மத்ய பாங்கு விசாரணைக் கமிட்டியார் தீர்பின்படி சராசரி விவசாயிகள் நபர் ஒருவரின் வருஷ வருமானம் ரூ. 42 க்கு மேற் போகவில்லை.

* * *

விவசாயிகள் சம்பந்தமான கடன் விபரத்தை, 1930ம் வருஷம், மாகாணபாங்கிங் விசாரணை கமிட்டிகள் பிரசுரித்துள்ளன. பிரசுரிக்கப்பட்டுள்ள பல்வேறு மாகாணங்களின் விவசாய கடன்கள் முழுதும் சரியாக இல்லாவிட்டாலும், ஏதோ கூடுமான வரை சரியான புள்ளிவிபரமாகக் கருதலாம்.

| மாகாணம் | கடன் | |
|---|---|---|
| பம்பாய் (சிந்து உள்பட) | ரூ. 81 | கோடி |
| சென்னை | 150 | ,, |
| வங்காளம் | 100 | ,, |
| ஐக்கிய மாகாணம் | 124 | ,, |
| பஞ்சாப் | 135 | ,, |
| மத்ய மாகாணம் பீரார் | 36½ | ,, |
| பீகார், ஒரிஸ்சா | 155 | ,, |
| அஸ்ஸாம் | 22 | ,, |
| Central Areas | 18 | ,, |
| கொர்க் | 35-55 | லக்ஷம் |
| பர்மா | 50-60 | |

### நீங்கள் அவசியம் படிக்க வேண்டிய புஸ்தகங்கள்

| | விலை |
|---|---|
| வர்க்கப் போராட்டம் | 0-0-6 |
| சோஷியலிஸத்தின் சரித்திரம் | 0-0-6 |
| சோஷியலிஸ்டுப் பாடல்கள் | 0-0-6 |
| ரஷ்யப் புரட்சி | 0-2-0 |
| தண்டனை யாருக்கு? ஏழைகளின் சுவர்க்கம் முதலிய கதைகள் | 0-2-0 |

கிடைக்குமிடம்:

**THE TAMILNAD SOCIALIST LITERATURE PUBLISHING HOUSE**

*270, Triplicane High Road, Madras.*

**Printed by R. Balan at Jesu Press, Edited and Published by P. Jeevanandan, 270, Triplicane High Road, Madras.**